ச்செக்ஸ், ஸ்ட்ரைப்ஸ் மற்றும் டெக்ஸ்சர்ஸ் மாதந் தோறும் நூற்றுக்கும் மேலான டிஸைன்கள்.

எக்ஸிக்யூட்டிவ் கலெக்ஷனிலிருந்து ஷர்ட்டிங்குக







**பாம்பே டையிங்** 

# குடிநீரா? கானல்நீரா?

வறண்டு கிடக்கும் புழலேரி.

**கல்கி வாசகர்கள் சிலருடன் தண்ணீர்ப் பிரச்னையைப் பற்றிக் கலந்துரையாட அமைச்சர் ராஜாராம் சம்மதித்தார். அவருடன் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் பலரும் வந்திருந்தனர். சுமார் நாற்பத்தைந்து நிமிடங்களுக்கு நீடித்த உரையாடலின் தொகுப்பு:**

*அமைச்சர்:* முதலில் சென்னை நகருக்கு எப்படித் தண்ணீர் கிடைக்கிறது என்பதை விளக்குகிறேன். குடிநீருக்கு முழுக்க முழுக்க வடகிழக்குப் பருவ மழையைத்தான் சென்னை நகரம் நம்பியிருக்கிறது. வடகிழக்குப் பருவ மழைநீரைப் பூண்டி, சோழவரம், செங்குன்றம் ஆகிய ஏரிகளில் தேக்குகிறோம். இவற்றின் கொள்ளளவு தோராயமாக ஆறரை மில்லியன் கன அடி. இந்த மூன்று ஏரிகளும் மழைக் காலத்தில் முழுவதும் நிரம்பினால் அடுத்த பன்னிரண்டு மாதங்களுக்குச் சென்னை நகரத்திற்குத் தண்ணீர் கிடைப்பது உறுதி. சென்னை நகருக்கு இந்த ஏரிகளிலிருந்து நாளொன்றுக்குச் சுமார் 208 மில்லியன் லிட்டர் நீரும், 23 மில்லியன் லிட்டர் நிலத்தடி நீரும் வழங்கப்படுகிறது. வட சென்னையில் உள்ள எண்ணெய் சுத்திகரிப்பு ஆலை, எண்ணூர் அனல் மின் நிலையம் மற்றும் சென்னை உரத் தொழிற்சாலை ஆகியவற்றுக்கு நாளொன்றுக்கு 55 மில்லியன் லிட்டர் நிலத்தடி நீர்; தென் சென்னைப் பகுதிகளான பெசன்ட் நகர் இந்திரா நகர் சாஸ்திரி நகர், அசோக் நகர், திருவான்மியூர் ஆகிய இடங்களுக்குப் பத்து மில்லியன் லிட்டர் நிலத்தடி நீர் வழங்குகிறோம். இது தான் தற்போதைய நிலைமை. இப்போது நீங்கள் உங்கள் கேள்விகளைக் கேளுங்கள்.

*ராஜலட்சுமி:* நீங்கள் குறிப்பிட்ட பட்டியலில் எங்கள் பகுதியான கஸ்தூரிபா நகர் அடங்கவில்லை. எப்போது தண்ணீர்ப் பஞ்சம் வந்தாலும் அது புழலேரி லைனின் இறுதிப் பகுதியான எங்கள் பகுதியை அதிகம் பாதிக்கிறது. ஒரு வருஷம் தண்ணீர்ப் பஞ்சம் என்றால் அடுத்த வருஷமே சென்னையில் வெள்ளம் வந்து கோட்டூர்புரம் போன்ற பகுதிகள் பாதிக்கப்படுகின்றன. எங்கள் தண்ணீர்ப் பிரச்னைக்கு நிரந்தரமான தீர்வே கிடையாதா?

வேதகிரி, தலைமைப் பொறியாளர் மெட்ரோ வாடர் போர்ட்: பள்ளிப்பட்டு என்ற இடத்தில் நில ஆர்ஜிதம் செய்து, மேல்நிலைத் தொட்டி அமைத்து அங்கிருந்து சென்னை கஸ்தூரிபா நகர், காந்தி நகர் போன்ற இடங்களுக்குக் குறைவின்றித் தண்ணீர் வழங்க ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன. இப்பணி முடிந்தால் உங்கள் பகுதியின் தண்ணீர்ப் பிரச்னை நிரந்தரமாகத் தீர்ந்துவிடும்.

*ராஜலட்சுமி:* இது மாதிரி இரண்டு மூன்று முறை வாக்குறுதிகள் அளிக்கப்பட்டு எதுவுமே நடக்கவில்லை. பொது மக்களாகிய எங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதி என்பதால் உரிமையோடு சொல்கிறோம்—

வேதகிரி: நில ஆர்ஜிதத்தில் சிறிது தாமதமாகிவிட்டது இப்போது நிலம் ஆர்ஜிதம் செய்யப்பட்டு விட்டதால் 87 — 88 இல் நிச்சயம் நிரந்தரமான தீர்வு கிடைத்துவிடும்.

ராஜலட்சுமி: நிலத்தடி தண்ணீரை எடுத்துக் கொண்டே இருப்பது இயற்கைக்கு விரோதமான செயல். நாளாவட்டத்தில் இதனால் அதிகக் கெடுதல் ஏற்படும் என்று வல்லுனர்கள் சொல்கிறார்கள்.

வேதகிரி: UNDP அமைப்பு ஆராய்ச்சி செய்து எந்த அளவிற்கு இயற்கைக்கு விரோதமின்றி நிலத்தடி நீரைப் பயன்படுத்தலாம் என்று நிர்ணயித்துள்ளது. அப்படி நிர்ணயிக்கப்பட்ட அளவில் அறுபது சதவிகிதம்தான் இப்போது எடுத்துக் கொண்டிருக்கிறோம்.

ராஜலட்சுமி: அப்படியா? மதுரையில் ஒருநாள் விட்டு ஒருநாள்தான் குடிதண்ணீர் வழங்கப்பட்டு வருகிறது என்று செய்திகள் பார்த்தோம். அதோடு திருச்சியிலும் தண்ணீர் கஷ்டமாம்.



* மீனு, ராஜலட்சுமி.

பொன்னுசாமி (வாடர் போர்ட்): மதுரையைப் பொறுத்த வரையில் தற்போதைய சூழ்நிலையில் தண்ணீர்ப் பிரச்னை இல்லை. மதுரைக்கு வைகையிலிருந்துதான் தண்ணீர் வழங்குகிறோம். (infiltration wells அமைத்து). இரண்டு நாட்களுக்கு ஒருமுறையாகத் தண்ணீர் சப்ளையைக் குறைத்தது ஒரு ...ன்னெச்சரிக்கை நடவடிக்கையாகத்தான் ...க்கள் பீதியடைகிற அளவுக்கு மதுரையில் ஏதும் தண்ணீர்த் தட்டுப்பாடே இல்லை. மேலும், இரண்டு புதிய கிணறுகள் திறக்கப்பட்டு மின்சார இணைப்புக்காகக் காத்திருக்கின்றன. அது கிடைத்ததுமே இன்னும் கூடுதலான தண்ணீர் மதுரைக்கு வழங்கப்படும்.

ராஜலட்சுமி: ஊட்டியில் கோடை விழா கொண்டாடி மலர்க் கண்காட்சியெல்லாம் நடத்துவீர்கள். அதற்கும் கூட்டம் சேரும். தண்ணீர்ப் பஞ்சத்தில் அக்கூட்டத்தை எப்படி சமாளிப்பீர்கள்?

பொன்னுசாமி: ஏற்கெனவே கொடுத்துக் கொண்டிருக்கும் தண்ணீர் அளவை அதிகரிக்க, 437 லட்சம் செலவில் புதிதாக ஒரு திட்டம் வகுக்கப்பட்டு ஏப்ரல் முதல் வாரத்திலிருந்து கூடுதலாக இரண்டு மில்லியன் காலன் தண்ணீர் கிடைக்கும்படி செய்யப்பட்டுள்ளது. இந்த வருடக் கோடை சீசனில் ஊட்டியில் தண்ணீர்ப் பஞ்சம் இருக்காது.

ராஜலட்சுமி: தஞ்சை மாவட்டத்தில் மன்னார்குடி போன்ற சில ஊர்களுக்குப் போயிருந்த போது பாமினி ஆறு போன்றவை ஏற்கெனவே வற்றிப் போயிருப்பதைப் பார்த்தோம். கிணறுகளிலும் தண்ணீர் மிக மிக ஆழத்தில்தான் இருக்கிறது. இரண்டு குடம் தண்ணீர் எடுத்தால் அடுத்த இரண்டு மணி நேரம் தண்ணீர் ஊறினால் தான் மீண்டும் எடுக்க முடிகிறது. எப்போதுமே அவர்களுக்கு இந்தப் பிரச்னை இருக்கிறது. இவர்களுக்கு நிரந்தர நிவாரணம் அளிக்கப்பட்டால் நன்றாயிருக்கும்.

பொன்னுசாமி: தஞ்சாவூரிலும் சரி, இதர மாவட்டங்களிலும் சரி, போர் வெல் போடுவதால் தண்ணீர்ப் பிரச்னையைத் தீர்க்க முடியாது என்பது உறுதியாகி விட்டதால் இப்போது ஊற்றுக் குடிநீர்த் திட்டத்தை அமுல்படுத்த அரசாங்கம் முடிவெடுத்துள்ளது.

## வறட்சி ஏன்? வெல்வது எப்படி?

வறட்சி ஒன்றும் தமிழ்நாட்டுக்கு ஒரு புதிய பிரச்னையே அல்ல. இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளுக்கு ஒரு முறை கடும் வறட்சியும் குடி தண்ணீர்ப் பஞ்சமும் தோன்றியபடிதான் இருக்கின்றன. ஆனால் இவ்வளவு 'அனுபவம்' இருந்தும் அந்த அனுபவங்களிலிருந்து நாம் எந்தப் பாடத்தையும் கற்றுக் கொள்ளவில்லை என்பதே வருத்தத்துக்குரிய உண்மை.

நமது மாநிலத்தின் சில பகுதிகளில் ஆண்டொன்றுக்கு 700 முதல் 800 மி.மீ அளவே மழை பெய்கிறது: (உ-ம் ராமநாதபுரம்). உதகை போன்ற வேறு இடங்களில் மிக அதிகமான அளவு—2500 மி. மீ. வரை மழை பெய்கிறது. சராசரி கணக்குப்படி தமிழகத்தின் மொத்த நிலப் பரப்பான 13 மில்லியன் ஹெக்டேரிலும் 900 மி.மீ. மழை ஆண்டொன்றுக்குப் பெய்கிறது. இதில் 34 .28 சதவிகிதம் தண்ணீர் நீராவியாக மாறியும், மரங்கள் மற்றும் தாவரங்களால் உறிஞ்சப்பட்டு ஒளிச்சேர்க்கை மூலம் ஆவியாகியும் செலவாகிறது. ஆவியாக மாறும் தண்ணீர்தான் நமக்குத் திரும்ப மழையாகக் கிடைக்கிறது. 14 .5 சதவிகிதம் தண்ணீர் மட்டுமே நிலத்துக்கடியில் சேகரிக்கப்படுகிறது. மீதி தண்ணீர் முழுவதும் நிலத்தில் வழிந்தோடிக் கடலில் போய்க் கலந்து விடுகிறது!

கடலில் வழிந்தோடும் தண்ணீரின் அளவைக் குறைப்பதன் மூலமும் நிலத்தடி நீரின் தேக்கத்தை அதிகரிப்பதன் மூலமும் மட்டுமே தண்ணீர்ப் பிரச்னையையும் வறட்சியையும் எதிர் கொண்டு சமாளிக்க இயலும். புதிய அணைகள், நீர்த் தேக்கங்கள் கட்டுவதன் மூலம் ஓரளவு பயன் கிடைக்கும். ஆனால் இதைவிட முக்கியம் ஏற்கெனவே இருக்கின்ற இயற்கை நீர் நிலைகளை நல்ல விதமாகப் பராமரிப்பதுதான். ஆறுகள், குளங்கள்,

நிரந்தரமாகத் தண்ணீர் கிடைக்கக் கூடிய இடங்களிலிருந்து, தூரத்தையும் செலவை யும் பொருட்படுத்தாமல், சிறு சிறு கிராமங் களுக்கும் குழாய் மூலம் தண்ணீர் கொண்டு வந்து மேல்நிலைத் தொட்டிகளில் தேக்கி வழங்கத்திட்டமிடப்பட்டுள்ளது. உடனடி நிவா ரணமாகத் தஞ்சாவூரில் (Deep bore well) ஆழ்குழாய்க் கிணறுகள் அமைக்க வும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. ஆனால் தஞ்சையில் பூமி கடினப் பிரதேசமாக இல்லா மல் மிருது மண்ணாக இருப்பதால் இதில் கால தாமதம் ஏற்படுகிறது.

கல்கி: மாவட்டச் சுற்றுப்பயண அனுபவங் களின் அடிப்படையில் சொல்கிறோம். கிரா மங்களில் மே.நி.தொட்டி இருந்தால் பம்பு இருப்பதில்லை. பம்பு இருந்தால் வேலை செய் வதில்லை; இரண்டும் இருந்து தண்ணீர்த் தொட்டிக்கு ஏற்றப்பட்டால் அதில் இருக்கும் ஓட்டை அல்லது விரிசல் வழியாகக் கசிந்து சிறிது நேரத்திலேயே வீணாகப் போகிறது.

ராஜாராம்: நீங்கள் பார்த்த ஒரு சில கிராமங்களில் அப்படி இருந்திருக்கலாம். ஆனால் ஆயிரக்கணக்கான கிராமங்கள் தமிழ்நாட்டில் இருக்கின்றன. அவை எல்லா வற்றுக்கும் தண்ணீர் கிடைக்கத்தான் நாங் கள் திட்டமிட்டு வேலை செய்து கொண்டிருக் கிறோம். கடலருகே உள்ள மீனவர்க் குப்பங் களில் ஆழ்குழாய்க் கிணறுகள் தோண்டி னால் உப்பு நீராக வரும் என்பதால் எட்டடி ஆழத்திலேயே குழாய்களைப் பதித்து, பம்பு கள் போட்டுள்ளோம். ஒவ்வொன்றுக்கும் இருபத்தைந்தாயிரம் ரூபாய் செலவழித் துள்ளோம். இப்படி 38 கிணறுகள் 38 கிரா மங்களில் அமைக்கப்பட்டுள்ளன.

ராஜலட்சுமி: கடல் நீரைக் குடிநீராக மாற்றும் திட்டம் பற்றிப் பேசப் பட்டதே...?

ராஜாராம்: அரபு நாடுகளிலெல்லாம் இத்திட்டம் நன்றாகச் செயல்பட்டுக் கொண் டிருக்கிறது. ஆனால் அதற்குச் சுமார் 750 கோடி ரூபாய் பணம் செலவாகும், மத்திய அரசின் அனுமதி வேண்டும்...



"எந்தவிதப் பிரச்னையும் இருக்காது!"

ராஜலட்சுமி: நிரந்தரமாகக் குடிநீர் கிடைக்க வழி பிறக்கும் என்றால் நாங்கள் செலுத்தும் Water Tax ஐச் சிறிது அதிகப் படுத்தினாலும் ஏற்றுக் கொள்வோம்.

ராஜாராம்: கடல் நீரைக் குடிநீராக்கும் திட்டத்தைச் செயல்படுத்த ஏராளமான பொருட் செலவாகும். அந்தப் பாரத்தை நம் மக்களால் தாங்க முடியாது.

ராஜலட்சுமி: வரப் போகும் கோடையை எப்படிச் சமாளிக்கப் போகிறோம்?

ராஜாராம்: உங்கள் மூலம் சென்னை நகரப் பொதுமக்களுக்கு ஒரு வேண்டுகோள் விடுக்கிறேன். வருகிற கோடையைச் சமா ளிப்பதில் எந்தவிதப் பிரச்னையும் இருக்காது. பயப்படும்படியான சூழ்நிலை இல்லை

ஏரிகள் போன்றவற்றின் கொள்ளளவை அதிகப் படுத்த அவற்றில் பல நூறு வருடங்களாகத் தேங்கிக் கிடக்கும் வண்டல் மண்ணை அவ்வப் போது அகற்ற வேண்டும். இவ்வாறு செய்வதால் வெள்ளம் வந்து தண்ணீர் விரயமாவது தடுக்கப் படுவதோடு, தேங்கும் நீரின் அளவு அதிகமாவ தால் நிலத்தடி நீரும் வளம் பெறுகிறது.

ஆனால் நாம் இயற்கைக்கு விரோதமாகவே செயல்பட்டுக் கொண்டிருக்கிறோம். கண்மூடித் தனமாகக் காடுகளை அழித்து விடுவதால் பெய்யும் மழை அளவு குறைந்து போய்க் கொண்டிருக் கிறது. மேலும் நகர்ப்புறங்களில் மட்டுமின்றி கிராமப்புறங்களிலும் இயற்கையாக அமைந் திருந்த ஏரிகள் மற்றும் சிறிய குளங்கள் போன்ற வற்றைத் தூர்த்துக் கட்டடங்கள் கட்டி வருகிறோம். இதனால் கணிசமான அளவு நீர்ப்பரப்புப் பிரதே சத்தை நாம் இழப்பதோடு அந்த அளவிற்கு நிலத் தடி நீர் வளமும் குன்றிப் போகிறது. தமிழ்நாட்டில் 1960 இல், 93600 என்றி ருந்த குளங்கள், ஏரிகள் போன்ற நீர்நிலை களின் எண்ணிக்கை 1980 இல் 84100 ஆகக் குறைந்தது. அணைக்கட்டுகளின் எண்ணிக் கையும் 7100 லிருந்து 7000 மாகக் குறைந்தது. இது ஒரு பக்கம் இருக்க, இன்னொரு பக்கத்தில் நவீன விவசாய முறைகள் சில, அதிகத் தண்ணீ ரைப் பயன்படுத்துவதோடு, இரசாயன உரக் கலப்புக் காரணமாக அந்தத் தண்ணீரை மீண்டும் பயன்படுத்தும் தன்மை இல்லாமல் செய்துவிடு கின்றன. அதாவது விவசாயக் கழிவு நீரும் தொழிற் சாலைக் கழிவு நீர் மாதிரியே ஆகிவிட்டது!

இதையெல்லாம் மனத்தில் கொண்டு, நீர் வள நிலவள வல்லுனர்களின் துணையுடன் நல்ல, புதிய திட்டங்களைத் தீட்டுவதால் மட்டுமே தமிழ்நாட்டின் குடிநீர்ப் பிரச்னையைத் தீர்க்க முடியும்.

புள்ளி விவரங்கள்; நன்றி: 'இனி'

என்றாலும் தனியார் கிணறுகளைச் சுத்தம் செய்து, தூர் எடுத்து வைத்துக் கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறேன். குடிநீர் வாரியம் வழங்கும் தண்ணீரைக் குடிக்கவும் சமைக்கவும் மட்டுமே உபயோகிக்கும்படி வேண்டுகிறேன். பிரதான குழாய்களிலிருந்து மோட்

## தெலுங்கு — கங்கா — ஒரு சு(சோ)கமான கனவு!

''என்னை வாழ வைக்கும் தமிழகத் தாய்மார்களின், பெரியோர்களின், சென்னை வாழ் மக்களின் நீண்ட காலத் தேவையான குடிநீர் பிரச்னைக்கு அவசர அவசிய நோக்கோடு என்னால் முடிந்த அளவு எனது கடமையை அண்ணா வழியில் செய்து முடிக்கின்றேன்.'' — கிருஷ்ணா நதி நீர்த் திட்ட ஒப்பந்தம் குறித்து 26.4.83 இல் முதல்வர் எம். ஜி. ஆர் சட்டமன்றத்தில் வைத்த அறிக்கையிலிருந்து.

ஆயிற்று நான்கு வருடங்கள்.

வடகிழக்கு மழை பொய்க்கும் போதெல்லாம் சென்னை வாழ் மக்கள் குடங்களைத் தூக்கிக் கொண்டு தெருத் தெருவாக அலைவதும் அரசாங்கம் லாரிகளில், தண்ணீர் கொண்டு வந்து விநியோகித்து, ''பிரச்னையைத் தீர்த்து வைத்து விட்டோம்'' என்று கடமையைக் கூடச் சாதனையாகக் கூறிப் பெருமைப்படுவதும் வழக்கமாகி விட்டது.

தெலுங்கு கங்கை என்ன ஆயிற்று?

தலைமைச் செயலக, மற்றும் பொதுப் பணித் துறை வட்டாரங்களில் விசாரித்தால் ஏதோ தூக்கத்தில் இருந்து விழிப்பவன் போல ''என்ன, கிருஷ்ணா நதி நீரா?'' என்று கேட்டுவிட்டு அழுக்குக் கோப்புகளில் தலையைக் கவிழ்த்துக் கொள்கிறார்கள். ''அண்ணன் எம். ஜி. ஆரும் தம்பி என். டி. ஆரும் ஏன் மீண்டும் சந்தித்துக் கொள்ளவில்லை?'' என்று கேட்டால், ''அது பெரிய இடத்து சமாசாரம் ஸார்'' என்று கூறிவிட்டு ''என்ன, காப்பியா, டீயா?'' என்று பேச்சை மாற்றுகிறார்கள்.

''என்ன ஸார், தமிழக அரசு எவ்வளவு பணம் கொடுத்திருக்கிறது? வேலை எவ்வளவு தூரம் நடந்திருக்கிறது?'' என்று கேட்டால், ''பொன்னியின் செல்வன் எத்தனை தடவை படித்தாலும் சலிக்காது ஸார்'' என்று பதில் சொல்கிறார்கள்.

என்ன பிரச்னை? எங்கே கோளாறு?

கிருஷ்ணா நதிநீரைச் சென்னைக்குக் கொண்டு வருவதற்கு முன்னதாக ஆந்திராவைத் தமிழகத்திலிருந்து பிரிக்கக் கூடாது என்று தீவிரமாக இருந்தார் ராஜாஜி. மாநிலம் பிரிக்கப்பட்டால் பிரச்னை வருமென்று தெரிந்த தீர்க்கதரிசி அவர். ஆனால் அவர் சொன்னதை யார் கேட்டார்கள்? உணர்ச்சிகள் மேலோங்கும் போது உண்மைகள் அடிபட்டுப் போகின்றன. இன்று கிருஷ்ணா நதிநீரைப் பங்கிட்டுக் கொள்ளும் மாநிலங்களான மகாராஷ்டிரமும் கர்நாடகாவும் ஆந்திராவின் இந்தத் திட்டத்தை எதிர்க்கின்றன. ''சென்னைக்குத் தண்ணீர் கொடுப்பது பற்றி எங்களுக்கு ஆட்சேபனை இல்லை. ஆனால் என். டி. ஆர். சென்னைக்குத் தண்ணீர் என்று கால்வாய் வெட்டிவிட்டு ராயலசீமா பகுதியில் கிட்டத்தட்ட மூன்று லட்சம் ஏக்கர் நிலங்களுக்குப் பாசன வசதி அளிக்க நினைக்கிறார். ஏற்கெனவே செய்து கொண்ட நதிநீர் ஒப்பந்தத்தை மீறும் செயலாகும் இது'' என்று அவர்கள் கூறுகிறார்கள்.

1969 இல் கையெழுத்தான புசாவத் ஒப்பந்தப்படி 800 டி. எம். சி. கிருஷ்ணா தண்ணீரைத்தான் ஆந்திரா பயன்படுத்திக் கொள்ள வேண்டும். இது தவிர கிருஷ்ணாவில் உபரி நீர் வந்தால் பயன்படுத்திக் கொள்ளலாம். ஆனால் அந்த உபரி நீரை உபயோகப்படுத்திக் கொள்வதற்கு நிலையான நீர்ப் பாசனத் திட்டங்களை நிறைவேற்றக் கூடாது.

''நாங்கள் தெலுங்கு கங்கை மூலம் கொண்டு செல்லப் போவது 29 டி. எம். சி. தண்ணீர்-தான்'' என்று ஆந்திர அரசு சொன்னாலும் நம்ப மறுக்கின்றன, கர்நாடகாவும் மகாராஷ்டிரமும். ''29 டி. எம். சி. தண்ணீருக்கு 843 கோடி ரூபாய் செலவில் கால்வாயா?'' என்று கேட்கின்றன.

விளைவு — பிரச்னை மத்திய நீர்ப்பாசன கமிஷனுக்குப் போக, திட்டத்துக்கு மத்திய அரசு ஒப்புதல் அளிக்கத் தயங்குகிறது. இதுவரை தனது நிதியிலிருந்து 110 கோடி ரூபாய் செலவழித்துள்ள ஆந்திர அரசு, தமிழக அரசு இதுவரை கொடுத்துள்ள 47 கோடியையும் ஸ்ரீசைலம் பகுதியில் கால்வாய் வெட்டப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறது. தமிழக அரசு 15 டி.எம்.சி. தண்ணீர் பெற, கொடுக்க ஒப்புக் கொண்டுள்ள தொகை 200 கோடி.

ஸ்ரீசைலத்திலிருந்து பெண்ணார் வரை கால்வாய் வெட்டி அங்கு சோமசீலா அணையுடன் இணைப்பு ஏற்படுத்திப் பின்னர் சென்னைக்குக் கால்வாய் வெட்ட வேண்டும். ஸ்ரீசைலத்திலிருந்து சென்னை பூண்டி வரை வெட்டப்பட இருக்கும் கால்வாயின் நீளம் 475 கி. மீ. ஆனால் இதுவரை 30 கி.மீ., தூரம் கூட கால்வாய் வெட்டப்படவில்லை. வெட்டப்பட்ட கால்வாயும் ஆந்திரா பகுதியில் தான்.

இந்த நிலையில் 'இன்னும் பணம் கொடுங்கள்' என்று ஆந்திர அரசு கேட்க, 'இதுவரை கொடுத்த பணத்திற்குக் கணக்கு கொடுங்கள்' என்று தமிழக அரசு கேட்க, 'பணம் தரவில்லையானால் சென்னைக்கு ஒரு சொட்டுக் கிருஷ்ணா நதி நீர் கிடைக்காது' என்று ஆந்திரா அமைச்சர் ஒருவர் கூற, கர்நாடகாவும் மகாராஷ்டிரமும் திட்டத்தை எதிர்க்க, விவகாரம் நீண்டு கொண்டே போகிறது. மத்திய அரசும் தெலுங்கு கங்கைக்கு ஒப்புதல் அளிக்காமல் காலம் கடத்துகிறது.

ஆக மொத்தம், தெலுங்கு கங்கை, தாகத்தால் தவிக்கும் சென்னை மக்களுக்கு ஒரு சு(சோ)கமான கனவுதான்.

— கௌசல்யா

டார் போட்டுத் தண்ணீர் எடுக்க வேண்டாம். அப்படி மீறி எடுப்பவர் பேரில் கடும் நடவடிக்கை எடுக்கப்படும் என்றும் எச்சரிக்கிறேன். பொதுக் குழாய்களை உடைக்கவேண்டாம் என்றும் வேண்டுகோள் விடுக்கிறேன்.

மீனா: தண்ணீரைப் பகல் நேரத்தில் விடக்கூடாதா? மே. மாம்பலம் பகுதியில் இரவு நேரத்தில் தண்ணீர் வருவதால் மிகவும் கஷ்டமாக இருக்கிறது. எப்போது வரும் என்று காத்துக் கிடக்கும் நேரத்தில் தூக்கம் கெடுகிறது. பகல் பூராவும் வேலைக்குப் போயும் மாலையில் வீட்டு வேலை செய்தும், குழந்தைகளைப் பார்த்துக் கொண்டும் ஓய்வின்றி உழைக்கிறோம். இரவிலும் கண் விழிப்பதால் எங்கள் உடல்நிலை மிகவும் மோசமாகி விடுகிறது. சில நாட்கள் காத்திருந்தும் தண்ணீர் வருவதில்லை.

வேதகிரி: அத்தகைய இடங்களில்தொட்டிகளில் தண்ணீர் கொண்டு வந்து வைக்க ஏற்பாடு செய்துள்ளோம்.

கல்கி: தண்ணீர்த் தொட்டிகளை அவ்வப்போது சுத்தம் செய்வது யார்?

வேதகிரி: அதற்குக் குடிநீர் வடிகால் வாரியத்தின் ஆட்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்.

மீனா: எந்த நேரத்தில் தண்ணீர் விடப் போகிறீர்கள் என்று முன்கூட்டியே அறிவித்தால் நாங்கள் இரவெல்லாம் விழித்துக் கொண்டிருக்க வேண்டாமில்லையா?

ராஜாராம்: அதை இனி செய்தித் தாள்களிலேயே அறிவித்து விடுகிறோம்.

ராஜலட்சுமி: சென்னை நகரைப்பொறுத்தமட்டில் இன்னொரு பிரச்னை ஃப்ளாட் சிஸ்டம். ஒரு சின்ன இடத்தில் ஒன்றின் மேல் ஒன்றாக இருபது குடித்தனங்கள். நான்கு பேர் வசிக்க வேண்டிய இடத்தில், செங்குத்தான வளர்ச்சி காரணமாக நூறு பேர் வசிக்கிறார்கள். இத்தனை பேருக்கும் ஒரே கிணற்று நீர்தான் என்பதால் அக்கம் பக்கத்துத் தனிநபர் வீட்டுக் கிணறுகளின் தண்ணீர் மட்டம் மிகவும் குறைந்து விடுகிறது. இதை உத்தேசித்துத் தற்காலிகமாகவாவது ஃப்ளாட்கள் கட்டப்படுவதை நிறுத்தி வைக்கக் கூடாதா?

ராஜாராம்: திடீரென்று அப்படியெல்லாம் நிறுத்திவிட முடியாது. கட்டடத் தொழிலாளர்களெல்லாம் பாதிக்கப்படுவார்கள். மேலும் பக்கத்துக் கிணறுகளில் தண்ணீர் மட்டம் அப்படி ஒன்றும் குறைந்து விடாது.

மீனா: சில இடங்களில் இருபத்து நாலு மணி நேரமும் தண்ணீர் வருகிறது. சில இடங்களில் வருவதே இல்லை.

ராஜாராம்: அப்படி இருக்கவே முடியாது.

கல்கி: கிரீன்வேஸ் ரோடில் இருக்கிறது!

ராஜலட்சுமி: சில இடங்களில் வீட்டு



பெரம்பூரில் குமார்: "தெருவுக்கு ஒரு பம்பு வைக்கறதோட அரசாங்கத்தின் வேலை முடிஞ்சு போச்சு. நாலு அடி அடிச்சா அந்தப் பம்பு சாஞ்சிடும். அதனால் நாங்களே பணம் வசூல் பண்ணி பம்புக்குப் பலமா மேடை கட்டியிருக்கோம். வாஷர் மாத்தறது. பெயிண்ட் அடிக்கறது எல்லாம் எங்க செலவுதான். வீட்டுக்கு இவ்வளவுன்னு காசு வாங்கிக்கிடுவோம். ஒரு வீட்டுக்கு நாலு குடம் தண்ணிதான் குடுப்போம்."



மம்சா: "இன்னைக்கு எவ்வளவு துட்டு சம்பாதிக்க முடியுமோங்கறதைக் காட்டிலும் இன்னைக்கு ஒரு குடம் தண்ணி கிடைக்குமாங்கற கவலைதாங்க அதிகமாயிருக்கு......"

ஆஷாபி: "இப்பவே தண்ணிக்கு இப்படி அலைய வேண்டியிருக்குன்னா அடுத்த மாசம் எப்படியிருக்குமோ. நினைச்சுப் பார்த்தாலே உடல் நடுங்குதுங்க. எப்படியோ, நாங்க, எம். ஜி. ஆரைத்தான் நம்பியிருக்கோம். அவருதாங்க ஏதாச்சும் பண்ணணும்."

பேட்டி. புகைப்படங்கள்: கே. வி. ஆனந்த்



டாங்குகளில் தண்ணீர் நிரம்பி வழிந்துகூட விடுகிறது.

ராஜாராம்: நீங்களே தண்ணீர் இல்லை என்றும் சொல்கிறீர்கள். இருக்கிறது என்றும் சொல்கிறீர்கள்.

ராஜலட்சுமி: சில இடங்களில்தான் அப்படி நீங்கள் வேண்டுமானால் மாறுவேஷத்தில் வந்து பாருங்களேன்.

ராஜாராம்: மாறு வேஷமெல்லாம் தேவையில்லை, சுயரூபத்திலேயே வருகிறேன். இப்போது உடனடி நடவடிக்கையாகச் சென்னை நகரில் குடிநீர்த் தட்டுப்பாடு இல்லாமல் இருக்கத் தேவையான நடவடிக்கைகளைப் போர்க்கால வேகத்தில் எடுத்து வருகிறோம். ஏதேனும் புகார்கள் இருந்தால் பத்திரிகை மூலமாகவோ தொலைபேசி மூலமாகவோ எங்களுக்குத் தெரிவியுங்கள். உடனே நடவடிக்கை எடுக்கிறோம்.

கல்கி: அனேக திட்டங்களைக் காகிதத்தில் பார்ப்பதோடு சரி. நமது நாட்டில். கங்கை காவிரி இணைப்பிலிருந்து சகலத்துக்கும் திட்டம் இருக்கிறது. ஆனால் எவ்வளவு திட்டங்கள் செயலாகின்றன?

ராஜாராம்: நாம் கங்கை — காவிரியைப் பற்றிப் பேச இங்கு வரவில்லை.

ராஜலட்சுமி: தெலுங்கு — கங்கை எவ்வளவு தூரத்தில் இருக்கிறது?

ராஜாராம்: இன்றைய சந்திப்பின் நோக்கம் இந்தக் கோடையை எப்படிச் சமாளிக்கப்போகிறோம்என்பதைப்பற்றிப்பேசத்தான். அதைச்-சொல்லிவிட்டேன். மக்கள் நீர் நிர்வாகம் கற்றுக் கொள்ள வேண்டும். வீணாவதெல்லாம், flush out களில் விடப்படும் தண்ணீர்தான்

கல்கி: நீங்களே நீர் நிர்வாகத்தைக் கற்றுத் தரலாமே.

ராஜாராம்: அனுபவம்தான் சிறந்த பாடம். அதன் மூலம் அவர்களே கற்றுக் கொள்வார்கள்.

கல்கி: அந்த அனுபவப் பாடத்தை அரசும் கற்றுக் கொள்ள வேண்டாமா? 1983 இல் வெகுவாகப் பாதிக்கப்பட்டும் பயனில்லையே. கோடை முடிந்தால் தண்ணீர் கஷ்டத்தைப் பற்றி மறந்து விடுகிறதே?

ராஜாராம்: கோடை முடிந்த பிறகும் எதற்குத் தண்ணீர் கஷ்டத்தைப் பற்றிச் சிந்திக்க வேண்டும்?

உரையாடல் தொகுப்பு: **சீதா ரவி**

மேலட்டை வண்ணப்படங்கள், புகைப் படங்கள்: **யோகா, கே. வி. ஆனந்த்**



## வீட்டு வேலைகளில் எனக்குக் கைகொடுக்கும் நம்பகமான தோழியைச் சந்தியுங்கள்.

சுறுசுறுப்பும், பொறுப்பும் மிக்க இல்லத்தரசிகள் சிபிசி பிரீமியர் வெட்கிரைண்டரையே தேர்ந்தெடுக்கிறார்கள். அதற்கு வலுவான காரணங்கள் இதோ:

- மோட்டார் உற்பத்தியில் 40 ஆண்டு கால அனுபவம் வாய்ந்தவர்களால் தயாரிக்கப்படும் தனிச்சிறப்பு மிக்க சிபிசி பிரீமியர் மோட்டார் இதன் ஜீவ நாடியாக விளங்குகிறது.
- இதனை இயக்குவது வெகு சுலபம்; சுத்தம் செய்வதும் எளிது.
- விற்பனைக்குப் பிந்திய உடனடி சேவைக்கு, விரிந்து பரந்த விற்பனை அமைப்பு வழி வகுக்கிறது.
- இரண்டு ஆண்டுகால உத்தரவாதம் அளிக்கும் புகழ் வாய்ந்த வெட் கிரைண்டர் இது ஒன்றே.

வழக்கமான தோற்றத்திலும், சாய்த்து எடுக்கும் சாய்வு வகையிலும் கிடைக்கின்றன.

2 ஆண்டு கால உத்தரவாதம்!

**சிபிசி | பிரீமியர்**

**வெட் கிரைண்டர்கள்**

சென்னை: 173 தம்பு செட்டி தெரு, சென்னை — 1. போன்: 28364. • 15-A/3, மேல வெளி வீதி, மதுரை — 1. போன்: 22737. • 282, அவநாசி ரோடு, கோயமுத்தூர் — 18, போன்: 24451. • 3-A, காலேஜ் ரோடு, திருச்சிராப்பள்ளி — 2, போன்: 25030. • 649, நேரு ரோடு, விழுப்புரம் — 2, போன்: 2263. • 17-2-30, பொன்னியம்மன்கோவில் தெரு, சித்தூர் — 1. போன்: 2226.

OBM 9936 TM

# Agasthiar's Standard College Text Books & Hindi Guides

| | Rs. P. |
|---|---|
| 1. Text Book of Dynamics (Sixth Edition) | 35.00 |
| 2. Text Book of Statics (Fifth Edition) (Both By Dr. M.K. Venkataraman A.C. College of Eng. And Tech, Karaikudi) | 35.00 |
| அகஸ்தியர் தமிழ் இலக்கிய வரலாறு (டாக்டர் அரங்கசாமி) | 10.00 |
| Agasthiar Prathamic Complete Guide | 15.00 |
| Agasthiar Madhyama Complete Guide | 23.00 |
| Agasthiar Madhyama Naveena Ekanki Guide | 3.00 |
| Agasthiar Madhyama Prayog — II Guide | 6.00 |
| Agasthiar Rashtrabasha Complete Guide | 30.00 |
| Agasthiar Gadya Sankalam Guide | 6.50 |
| Agasthiar Kavya Sudha | 5.00 |
| Agasthiar Praveshika Gadyakusum II Guide | 8.00 |
| Agasthiar Praveshika Phulvari Guide | 10.00 |
| Agasthiar Praveshika Galpa Sanchayan Guide | 5.00 |
| Agasthiar Praveshika III Paper Guide | 15.00 |
| Agasthiar Praveshika Tamilmalai Guide | 6.00 |
| Agasthiar V. P. Ilakkia Kanigal Guide | 3.00 |
| Agasthiar V. P. Malarchendu Guide | 6.00 |
| Agasthiar Praveen Poorvartha Tamil Guide | 15.00 |
| Agasthiar Hindi Grammar Guide | 6.00 |

For all kinds of Hindi Text Bookx and Guides, Please write to us:

**Agasthiar Book Depot**

STORE HOUSE FOR HINDI BOOKS

POST BOX No: 334 ★ PHONE No 26051

TEPPAKULAM, P.O. TIRUCHI. 620002.

STOCKISTS:

*Madras:* 1. Madras Book House, Ranganathan Street, 2. Padmavathy, Thambu Chetty Street, 3. Manivasagar, 4. Bismi (both) Sunkurama Chetty Street, 5. K.N. Ramachandran West Mambalam, 6. K. Subramaniam, South Usman Road, 7. Vasantha, 8. Paragon, 9. Mohan, Triplicane, 10. Kanakadara, Palavanthangal; *Tirunelveli:* 11. Bala, 12. Rama, 13. Eagle, 14. Shyamala *Kumbakonam:* 15. A.V.R.V. *Thanjavur:* 16. Appar; *Salem:* 17. Shabari, 18. Ajanta, 19. Saraswathy, *Coimbatore:* 20. Cheran, 21. Chitra Publishers, 22. Coimbatore Hindi Saba; *Madurai:* 23. Sarathy, *Vellore:* 24. Vellore Book Centre; *Kancheepuram:* 25. Rama Ledge, *Nagercoil:* 26. Jayakumari: *Erode:* 27. Vela, 28. Senthil Book Palace, *Pondicherry:* 29. Pondy Book Centre, *Pollachi:* 30. A.B.B. Traders, 31. A.S.G.N. Book Shop, *Virudhunagar:* 32. Mariamman Stores, *Tuticorin:* 33. Vel Book Depot.




மே. வங்கத்
தேர்தலில்
படுதோல்வி


கேரளாவில்
தோல்வி
ஃபரூக் உதவியுடன் காஷ்மீரில்
இ. காங்கிரஸ் வெற்றி


போங்க, நீங்களும் போய்
கூழ் வைங்க!




சிவாஜி ரசிகர் மன்றம்


இன்று மாதிரி வரவேற்பு!
...படா அலாவ்டு!



# கல்கி

1987 ஏப்ரல் 5
மலர் 45 இதழ் 36
அக்ஷய பங்குனி 22



## ஜாலராக்கள், ஜாக்கிரதை!

மேற்குவங்கத்திலும் கேரளாவிலும் படு தோல்வி அடைந்த இ. காங்கிரஸ், காஷ்மீரில் ஃபாரூக் அப்துல்லாவின் முதுகில் சவாரி செய்து 'வின் போஸ்ட்'டைத் தொட்டிருக்கிறது. 'தோல்விகளைக் கண்டு மிரள வேண்டாம்' என்று ராஜீவ் வீரம் பேசினால் போதாது: ஜாலராக்களை எட்ட நிற்க வைத்துவிட்டு ஆத்ம பரிசோதனையில் இறங்க வேண்டும். தம்முடைய சமீபத்திய சில தவறுகளைப் பட்டியல் போட்டுப் பார்க்க வேண்டும்.

மிகச் சிறப்பாகப் பணியாற்றி மக்களின் ஏகோபித்த பாராட்டைப் பெற்று வந்த வி.பி. சிங்கை இடம் மாற்றிய தவறிலிருந்து தொடருவோமானால், தேவையற்ற இந்த அமைச்சரவை மாற்றம், அந்நியச் செலாவணி தொடர்பாகப் பெரிய குற்றங்கள் புரிந்துள்ள சில தொழிலதிபர்களை மட்டுமின்றி, தமது அருமை நண்பர் அமிதாப்பச்சனையும் காப்பாற்றுவதற்காக ராஜீவ் எடுத்த முடிவு என்பதாகக் கருத இடமளித்துவிட்டது. போதாக்குறைக்கு நிதி அமைச்சரவையில் உயர் அதிகாரியும், சட்ட அமுலாக்கப் பிரிவின் தலைவரும், வி.பி. சிங்கின் நம்பிக்கைக்குரியவருமான புரேலால் ஒரு சாமானியப் பதவிக்கு மாற்றப்பட்டதானது மேற்படி ஐயங்களுக்கு உரமளிப்பதாக அமைந்துவிட்டது. அப்புறம் உப்புச் சப்பில்லாத ஒரு பட்ஜெட் சமர்ப்பிக்கப்பட்டது. அதில் வர்த்தகத் தொழில் துறையினருக்குத் தலைவலியாகத் திகழக் கூடிய, குறைவில்லாமல் குழப்பங்களை ஏற்படுத்தக் கூடிய இரு புதிய வரிகள் வேறு! இதைத் தொடர்ந்து, ஜனாதிபதிக்கும் பிரதமருக்கும் இடையே ஏற்பட்ட மோதல். அதை ராஜீவ் புத்திசாலித்தனமாகக் கையாளாமல் போன பரிதாபம்!

'இவையெல்லாம் மாநிலத் தேர்தல்களைப் பாதிக்குமா?' என்றால் நிச்சயம் பாதிக்கும். ஏனெனில் மாநிலத் தேர்தல்களிலும் இ. காங்கிரஸ், ராஜீவின் பிராபல்யத்தையே பெரிதும் நம்பியிருக்கிறது. போதாக்குறைக்கு சூறாவளிப் பிரசாரத்துக்குப் பறந்து வந்த ராஜீவ் அவசரம் அவசரமாகச் சில திட்டங்களுக்கு அடிக்கல் நாட்டுவதும், இந்த மாநிலத்துக்கு இத்தனைக் கோடி ஒதுக்குகிறேன் என்று அறிக்கை விடுவதுமாக இருந்தார். இப்படி கட்சியையும் ஆட்சியையும் குழப்பி மக்களை ஏமாற்ற முடியாது என்பதை வாக்காளர்கள் நிரூபித்துவிட்டனர்.

கூர்க்காலாந்து விஷயத்தில் கிளர்ச்சியாளர்களை ஒரு பக்கம் தூண்டி விடுவதும், மறுபக்கம், 'அவர்களின் கிளர்ச்சிக்கு மேற்குவங்க முதல்வரே காரணம்; அவரே சமாளிக்கட்டும்' என்பதும் இரட்டை வேடம் போடும் தந்திரமாக உணரப்பட்டது

எல்லாமாகச் சேர்ந்து, பாரதத்தின் மையத்தில் சில மாநிலங்கள் தவிர, சுற்றிலும் உள்ள மற்ற எல்லா மாநிலங்களிலும் இ. காங்கிரஸ் செல்வாக்கும் பதவியும் இழந்து நிற்கச் செய்துவிட்டது.

கேரளத்திலும் சரி, காஷ்மீரத்திலும் சரி, மதத்தின் அடிப்படையில் அமைந்த கட்சிகளுக்கும் அவற்றுடன் கூட்டு சேர்ந்தவர்களுக்கும் தங்கள் ஆதரவு இல்லை என்று பெரும்பான்மை வாக்காளர்கள் தீர்ப்பளித்திருப்பது வரவேற்கத்தக்கது.

இவற்றிலிருந்தெல்லாம் இ. காங்கிரஸும் அதன் தலைவரும் பாடம் கற்க வேண்டும். அடிப்படைக் கோளாறு, காங்கிரஸ் கட்சியில் தலைவர்கள் உருவாவதில்லை; திணிக்கப்படுகிறார்கள் என்பதே. கட்சித் தேர்தல்கள் ஒழுங்காக நடந்து, உட்கட்சி ஜனநாயகம் செவ்வனே செயல்பட்டால்தான், நேர்மையான, திறமையான புதிய தலைவர்கள் தோன்றுவார்கள். இல்லையெனில் உட்பூசலும் போட்டி பொறாமையும் லஞ்ச ஊழலும் கட்சியை மேன்மேலும் பலவீனப்படுத்தவே செய்யும். இ. காங்கிரஸ் இன்று பதவியில் உள்ள சில மாநிலங்களிலும் கூட அது உட்பூசலாலும் போட்டி பொறாமைகளாலும் பலவீனப்பட்டுத்தான் போயிருக்கிறது.

மேற்கு வங்கத்திலும் கேரளாவிலும் கம்யூனிஸ்டுகள் ஜனநாயக முறையில் தேர்தலில் போட்டியிட்டுப் பதவிக்கு வந்திருப்பது உலகத்துக்கே ஒரு புதுமை என்றாலும், மக்கள், கம்யூனிஸ சித்தாந்தங்களை ஒப்புக் கொண்டதாக ஆகாது. மக்களுக்குக் காங்கிரஸினிடம் ஏற்பட்டுள்ள ஏமாற்றமே கம்யூனிஸ்டுகளைப் பதவியில் அமர்த்தியுள்ளது. இதனை நன்கு உணர்ந்து, நாட்டின் வட கிழக்கிலும், தென் மேற்கிலும் மார்க்ஸிஸ்டுகள் ஜனநாயக மரபுகளுக்குட்பட்டு, திறமையான, தூய்மையான நல்லாட்சியை வழங்கட்டும்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.



↑ தைக்காவில் பஜனை இசையுடன் அன்பர்கள்

# பூவராகருக்கு ஒரு ஸ்பெஷல் பாஸ்!

**ஹிந்து — முஸ்லிம் ஒற்றுமைக்கு வழிகாட்டும் ஊர் கிள்ளை.**

**கோ**யில்களை இடித்துக் கொள்ளையடித்துப் போன ஒரு தில்லி சுல்தானின் மகளை ஸ்ரீரங்கத்துப் பெருமாளிடம் காதல் கொண்டு ஓடிவந்து 'துலுக்க நாச்சியார்' ஆனது ஒரு கர்ண பரம்பரைக் கதை. இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு, நாச்சியாரின் தந்தை நெகிழ்ந்துபோய்த்திருவரங்கம் கோயிலுக்கு இரண்டு கிராமங்களை எழுதி வைத்தாராம். சிதம்பரத்துக்குக் கிழக்கே பதினொரு கி.மீ. தொலைவில் உள்ள கிள்ளையைச் சுற்றியும் ஒரு வரலாறு வழிவழியாகச் சொல்லப்பட்டு வருகிறது. இந்தப் பக்கங்களில் வசித்த ஒரு நவாப் — ஜாகீர்தார் என்கிறார்கள் — பிளவை போன்ற ஏதோ ஒரு நோயால் அவதியுற்றாராம். அவருடைய ஹிந்து நண்பர், அருகே, ஸ்ரீமுஷ்ணம் என்ற தலத்தில் உள்ள பூவராக சுவாமியின் பெருமையை எடுத்துச் சொல்லவும், ஜாகீர்தார் அந்தப் பெருமாளை வழிபட ஆரம்பித்தாராம். ஓர் இரவு பன்றி போன்ற உருவம் தன்னைத் தீண்டுவதைப் போல் உணர்ந்து கண்விழித்த போது, நோய் மறைந்திருந்ததாம். பூவராகப் பெருமான் (வராகம் — பன்றி) அருள் பெற்ற சாஹிப் 'பூரா சாஹிப்' ஆகிப் போனாராம். நன்றியுணர்வு மேலிடப் பெருமான் கைங்கர்யத்துக்கு ஏராளமான நிலங்களையும் எழுதி வைத்தாராம்.

பூரா சாஹிப் விட்டுச் சென்ற மான்யத்தை உப்பு வேங்கடராயர் என்ற பெரியவரின் வம்சத்தவர்கள் நிர்வகித்து வருகிறார்கள். இன்று அறக்கட்டளையின் காவலர் தியாகி உப்பு பூராமூர்த்தி. ஆண்டு தோறும் இவர்கள் நடத்தும் மாசி மகத் திருவிழாவில் தோழமையுடன் ஹிந்து—முஸ்லிம்கள் கலந்து கொள்வது ஓர் இனிய ஆச்சரியம்.

**க**டந்த மாசி மகத்தன்று கிள்ளையிலிருந்தோம். இவ்விழாவுக்குச் சுற்றுவட்டாரத்தில் உள்ள 138 கோயில்களிலிருந்து தெய்வத் திருவுருவங்கள் கிள்ளைக் கடற்கரையில் தீர்த்தவாரிக்கு வருகின்றன. இதில் ஸ்ரீதேவி பூதேவி சமேதராக ஸ்ரீமுஷ்ணத்திலிருந்து வரும் பூவராக சுவாமியும் ஒருவர். ஆனால் மற்ற எந்த தெய்வத்துக்கும் கிடைக்காத 'ஸ்பெஷல் பாஸ்' பூவராகருக்கு மட்டும்



* சுவாமியின் சிவிகை தர்கா வாசலில் காத்து நிற்கிறது.



உண்டு. கிள்ளை இஸ்லாமியர்கள் பெருவாரியாக வசிக்கும் தைக்கா பகுதிக்கு மேளதாளத்தோடு அவர் விஜயம் செய்தார். அங்கு முஸ்லிம் மக்கள் அவருக்கு அன்புடன் பட்டு வஸ்திரம் சாத்த, பதிலுக்கு, அவருக்கு அணிவிக்கப்பட்ட நிர்மால்ய மாலை 'ஹஸரத்சையத்ஷா ரஹ்மதுல்லா வலியுல்லா ஷுத்தாரி'யின் தர்காவுக்கு மேளதாளத்தோடு எடுத்துச் செல்லப்பட்டது. அந்தப் பெரியவரின் சமாதியில் அந்த நிர்மால்ய மாலையைப் பக்தியுடன் சாத்தி, பாத்தியா ஓதினார்கள். பிறகு, பஜனை கோஷ்டியினர் மிகவும் பொருத்தமாக ரகுபதி ராகவ பாட்டையும் ராம் ரஹிம் பாட்டையும் உணர்ச்சி பூர்வமாகப் பாடினார்கள். இந்த நேரத்தில் ஸ்ரீபூவராகரின் சிவிகை தர்கா வாசலில் காத்து நின்றது. தர்காவில் சர்க்கரைப் பிரசாதம் விநியோகித்ததும், பெருமானுக்குத் தீபாராதனை செய்தார்கள். அதன் பிறகு முஸ்லிம் சகோதரர்கள் வாழ்கின்ற வீதிகள் வழியே பூவராகரின் ஊர்வலம் தொடர்ந்தது. இறுதியில் திருநாள் தோப்பு மண்டபத்தில் வந்திறங்கி, குதிரை வாகனத்துக்கு மாற்றப்பட்டுத் தீர்த்தவாரிக்குக் கடல் நோக்கிச் சுமந்து செல்லப்பட்டார் பூவராகர். அவரை அப்படிச் சுமந்து சென்றவர்கள் — கிள்ளை மீனவத் தோழர்கள். அவர்கள் குதிரை போலவே வேகமாகத் துள்ளிச் செல்வது கண் கொள்ளாக் காட்சி.

மத பேதங்களையும் ஜாதி வேற்றுமைகளையும் மறந்து இப்படி ஒரு விழாவை வருடத்துக்கு ஒருமுறை ஒற்றுமையாகக் கொண்டாடுவதன் மூலம் மனித நேயத்தை வளர்த்து வரும் கிள்ளை மக்கள் பாராட்டுக்குரியவர்கள்தான். ஆனால் விழா முடிந்த, மற்ற நேரங்களில் எப்படி.....? அப்துல் ரஹீம் உபையத்துல்லா என்பவர் சொன்னார்: "நாங்க எப்பவும் ரொம்ப சினேகிதமா, நேசமாத்தான் இருக்கோம். அதனால்தான் எத்தனையோ வருஷமா இந்தத் திருவிழாவை முறைப்படி

* குமாரி பிரேமா சரக சகோதரிகளின் நாதசுர இசையுடன் பெருமானை வரவேற்கப் போகிறார்கள்



நடத்திக்கிட்டிருக்கோம். இந்த மாதிரி வேறே எந்த ஊரிலேயாவது பார்க்க முடியுமா சார்?"

அவருடைய பெருமிதம் வேறு பல ஊர்களுக்கும் பரவிப் பல 'கிள்ளை'கள் தோன்ற வேண்டும் என்பதே நமது பிரார்த்தனை.

— கலசைச்கிழார்

புகைப்படங்கள்: கே. வி. ஆனந்த்

---



"என்னைலேர்ந்து உங்க கணவரைக் காணலே?"

"போன வாரத்தில ஒரு நாள், 'இனிமே நீங்க சமையல் செய்ய வேணும். நாளைலேர்ந்து நானே சமையலைக் கவனிக்கப் போறேன்'னு சொன்னேன். அன்னிலேர்ந்துதான் இன்ஸ்பெக்டர்."

— புத்தனும்பட்டி கிருஷ்ணராஜு




திரைவிழாப்
படக்கதை




**போ**டிக் கற்களை அரைத்துக் கொண்டு அந்த மாட்டு வண்டி தன் நடத்தில் அசைந்து அசைந்து வந்தது. மாடுகளை வெகு அழகாகச் சமாளித்துக் கொண்டு ஓட்டி வரும் அந்த இளம் பெண்ணை ஜெயி தான் நின்ற இடத்திலிருந்து கவனித்தான்.

''அப்பா, எனக்குக் காலை வலிக்கிறது. இனிமேல் நடக்க மாட்டேன்'' என்று முழங்காலைக் கட்டிக் கொள்ளும் குட்டி மகனைக் குனிந்து பார்த்தான் ஜெயி. கையை வீசிக் காட்டி வண்டியை நிறுத்தச் சொன்னான்.

''ஒவ்... ஒவ்...'' வண்டி லாகவமாக நின்றது. ''சில்லறை வைத்திருக்கிறாயா?'' என்று கேட்டாள் பித்தோ — மாட்டு வண்டியை ஓட்டி வந்தவள். ஜெயி கொடுத்த காசை வாங்கிப் போட்டுக் கொண்டாள். ''பின்னால் ஏறிக் கொள். இது உன் குழந்தையா?''

''ஆம்'' என்றான் ஜெயி.

''அதன் அம்மா எங்கே?''



''ஜெயிலிலிருந்து நான் திரும்பி வருவதற்குள் இவனை அநாதையாக விட்டுவிட்டு இறந்து விட்டாள்.''

''நீ ஜெயிலுக்குப் போனாயா? ஏன்?''

''எனக்குப் புரட்சிக்காரன் என்று முத்திரையிட்டு விட்டார்கள். நினைத்த போதெல்லாம் ஜெயிலுக்குள் இழுத்துப் போய் விடுவார்கள்...''

''பரிதாபமாயிருக்கிறது. உன் நிலைமை. டேய் குட்டிப் பையா, என் மடியில் உட்கார்ந்து கொள்கிறாயா?'' பித்தோவுக்குக் குழந்தைகள் என்றால் கொள்ளைப் பிரியம் என்ற சேதி அவள் கண்களில், குரலில் எங்கும் வழிந்தது.

''மாட்டேன், போ.''

''உன் பேர் என்ன பையா?''

''சென்ஷியாங்...'' என்றான் ஜெயி.

''அவன் அம்மா வைத்த பெயர்... உன் பெயர் என்ன?''

''பித்தோ... அம்மா இல்லாமல் இத்தனை சின்னக் குழந்தையை எப்படிச் சமாளிக்கப் போகிறாய், நீ?''

''எனக்கே தெரியாது...'' ஜெயி எங்கோ வெறித்தான். எதிர்காலம் பற்றிய மௌனமான கவலை ரேகை அவன் வெறுமையான பார்வையில் இருந்தது.

''இந்த ஊருக்கு ஏன் வருகிறாய்?'' பித்தோ கேட்டாள்.

''இங்கே சுலபமாய் வேலை கிடைக்கும் என்றார்கள்...''

''உண்மைதான். வயல்களில் ஆட்கள் போதவில்லை...''

**பி**த்தோ சொன்னபடி, வந்து இறங்கிய இரண்டாவது நாளே ஜெயி வேலை தேடிக் கொண்டான். நிலத்தை உழுது, உரமிட்டு, சூரியகாந்திகளைப் பயிரிடும் வேலை.

ஜேமி, வேலை மும்முரத்தில் இருந்த போது மரத்தில்கட்டியிருந்ததூளியிலிருந்துகுழந்தை அலற ஆரம்பித்தது. ஜேமி வேலையை அப்படியே விட்டுவிட்டு ஓடினான். 'மகனை வெளியே எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டு ஜோ ஜோ என்று தட்டினான். சென்ஷியாங் மசிவதாயில்லை. குரலை இன்னும் கூட்டிக் கொண்டது. அக்கம்பக்கம் வேலையில் ஈடுபட்டிருந்தவர்கள் கூடத் திரும்பிப் பார்க்க ஆரம்பித்தார்கள். ஜேமி பதறினான். புட்டிப்பாலை வைத்து அழுத்திப் பார்த்தான். கைகளை ஊஞ்சலாக்கித் தாலாட்டிப் பார்த்தான். திடீரென்று அவன் கைகளிலிருந்து யாரோ குழந்தையைப் பறித்தார்கள். நிமிர்ந்தான்.

பித்தோ! குழந்தையை மார்போடு அணைத்துக் கொண்டு அவள் 'ஓ... ஓ...' என்று ஒற்றை எழுத்தை உச்சரித்ததும், அதன் அழுகை சுவிட்ச் போட்டாற்போல நின்றது. அவள் கழுத்தைக் கட்டிக் கொண்டு சென்ஷியாங் பூப்போலச் சிரித்தது.

''ஏய் பித்தோ! பதினெட்டு வயதிலேயே குழந்தையா! எப்படி நிமிஷமாய் அம்மா போல அதன் அழுகையை அடக்கி விட்டாள் பார்!'' பெண்கள் பகுதியிலிருந்து இரண்டொரு குரல்கள் வந்தன.

பித்தோவுக்கு வெட்கமாய் இருந்தது. சட்டென்று குழந்தையை அதன் அப்பாவிடம் கொடுத்துவிட்டுத் திரும்பினாள். உடனே குழந்தை உச்சஸ்தாயியில் மறுபடி வீறிட்டு அழ ஆரம்பித்தது. ஜேமி, வெகு சங்கடமாய் உணர்ந்தான்.

''அழக் கூடாது. அப்பாவுக்குக் கோபம் வரும்.

. அதைக் கேட்டதும் அழுகை இன்னும் பெரிதானது. போக மனமில்லாமல் பித்தோ நின்றாள். கு ழ ந் தை யி ன் குரல் அவள் கால்களை இடறியது. கேலி செய்பவர்களைப் பற்றி ஏன் கவலைப்பட வேண்டும்? பாய்ந்து போய்க் குழந்தையை வாங்கிக் கொண்டாள். மந்திரம் போட்டது.போல் குழந்தை அவள் ஸ்பரிசம் பட்டதும் அடங்கிப் போனது.

அன்றைக்குமாலைபித்தோவைத்தேடிக் கொண்டு ஈஷோன் வந்தான்.

''பித்தோ, என் நண்பர்கள் என்னைக் கலாட்டா செய்கிறார்கள்.''

''என்னவாம்?'' என்றாள் பித்தோ..

''நீ கொஞ்ச நாட்களாக ஒரு குழந்தையை வைத்துக் கொண்டு கொஞ்சுகிறாயாமே?''

''ஆமாம். சென்ஷியாங்... தாயில்லாக் குழந்தை. பாவம்...''

''அதற்காக? ஒரு கன்னிப் பெண்ணுக்கு வேறு வேலையே இல்லையா? 'உன் காதலி இப்போதே அம்மாவாகி விட்டாளடா!' என்று என்னைக் கேலி செய்கிறார்கள்...''

''ஈஷோன்... நம் காதல் வேறு. இந்தக் குழந்தை வேறு. இரண்டையும் சம்பந்தப் படுத்தாதே... குழந்தைகள் மலர் போன்றவர்கள். மலர்களை அழகு பார்ப்பவர்களை யாரும் கேலி செய்வதில்லை...''

''வேண்டாம் பித்தோ'' — ஈஷோன் மன்றாடினான்.

இரண்டே நாட்களில் புதிதாய் இன்னொரு திருப்பம் வந்தது. மண்ணையும், புழுதியையும் கிளப்பிக் கொண்டு ஒரு ஜீப் வந்து நின்றது. சீருடை அணிந்த போலீஸ் அதிகாரிகள் பட்பட் என்று இறங்கினார்கள். வயலில் வேலை செய்த ஜேமியைத் தேடிப் பிடித்தார்கள்.

''பக்கத்து ஊரில் கலகம் செய்தது நீதானே?''

''ஐயோ இல்லை. நான் இங்கே வேலை செய்து கொண்டிருக்கிறேன். யாரை வேண்டுமானாலும் கேட்டுப் பாருங்கள்...''

''புரட்சிக்காரனால் சும்மா இருக்க முடியாது என்று எங்களுக்குத் தெரியாதா? உனக்காக இத்தனை பேரையும் பொய்ச் சாட்சி சொல்ல வைக்கப் போகிறாயா? ஏறு ஜீப்பில்...'' முரட்டுத்தனமாய் அவனைப் பற்றினார்கள்.

''இது அநியாயம்...''

''ஏறடா வண்டியில்!''

''என் குழந்தை... என் குழந்தை...''

ஊரே ஸ்தம்பித்துப் பார்த்தது. ஜேமியின் குற்றமற்ற கைகளுக்கு விலங்கு மாட்டப்பட்டது. சென்ஷியாங் கதறியது. ஆனால் அப்பாவிடம் போக மறுத்தது. பித்தோவின் தோளிலேயே புதைந்து கொண்டது.

''நீங்கள் ஜெயிலுக்குப் போகும் காரணத்திற்காகக் குழந்தையையும் ஏன் சிறைச்சாலைக்குக் கொண்டு போக வேண்டும்? அவன் என்னிடமே இருக்கட்டும்'' என்றாள் பித்தோ.

''பித்தோ, உனக்கு நான் என்ன கைம்மாறு...'' வார்த்தையை முடிக்குமுன் ஜேமி ஜீப்பில் உதைத்து ஏற்றப்பட்டான்.

''என்ன காரியம் செய்தாய் பித்தோ?'' — அப்பா சீறினார். ''கல்யாணமாகாத பெண், குழந்தையைக் கொண்டு வந்து வைத்துக் கொண்டு... முதலில் எவனாவது பணக்காரனைப் பார்த்துத் தத்துக் கொடுத்து விடு...''

''இல்லை அப்பா. சின்னப் பையன் — அன்பு காட்டும் மனிதர்கள் அவனுக்குத் தேவை'' — பித்தோ பிடிவாதமாக இருந்தான்.

அவனோடு படுத்து, அவன் நனைத்து விடும் உடைகளையும், படுக்கையையும் துவைத்து, அவனுக்குக் கதைகள் சொல்லி, சோறு ஊட்டி, நெஞ்சோடு அணைத்து, அமைதிப்படுத்தி, பார்ப்பவர்கள் யாருமே அது இன்னொருத்தனின் குழந்தை என்றால் யோசனையோடு பார்த்தார்கள்.

''அம்மா'' என்று மரத்தடியில் சென்ஷியாங் குரல் கொடுக்கும். ஓடுவாள். ''இதோ பார். என்னை அம்மா என்று கூப்பிடக் கூடாது. அத்தை என்றுதான் கூப்பிட வேண்டும் என்று எத்தனை முறை சொல்லியிருக்கிறேன்?'' — என்று செல்லமாகக் கடிந்து



ரௌடி 1: "உன் லட்சியம் என்ன வாத்தியாரே?"
ரௌடி 2: "போலீஸ் ரெக்கார்டுகளில் என் பெயருக்கு முன்னாலிருக்கும் "பிக்பாக்கெட் மன்னன்" என்கிற அடைமொழி, "பிக்பாக்கெட் சக்கரவர்த்தி"யாக உயரணும்கிறதுதான்!"
— உ. ராஜாஜி.

கொள்வாள். "சரி அம்மா — அத்தை" என்று குழந்தை பதில் சொன்னதும் லஜ்ஜையோடு சிரிப்பாள்.

எல்லோரும் எப்போதும் சந்தோஷமாய் இருக்க உலகம் விடுவதில்லையே!

பித்தோ அன்றைக்கு வீடு திரும்பிய போது, அப்பா தரைக்கும், கூரைக்குமாகக் குதித்துக் கொண்டிருந்தார்.

"ஊரெல்லாம் என்னைத் தாத்தா — கள்ளப் பேரனின் தாத்தா — என்று கேலி பேசுகிறது. குழந்தையை இப்போதே எங்காவது தொலைத்து விட்டு வா. இல்லை என்றால் இந்த வீட்டுப் படி ஏறாதே...!

பித்தோ எவ்வளவோ மன்றாடியும் அவள் அப்பா இறங்கி வருவதாயில்லை.

"சரி... குழந்தையை அதன் அப்பா வந்து அழைத்துப் போகும் வரை நான் தனியே இருந்து கொள்கிறேன்..."

**பி**த்தோ குழந்தையுடன் தனியே பிரிந்ததும், ஊர் வாய் கிழிந்து போனது. பொழுது போகாதவர்களுக்கெல்லாம் 'பித்தோ போன வருஷம் வெளியூர் போனாளே, எதற்குத் தெரியுமா? கள்ளக் காதலன் மூலம் குழந்தை பிறந்து விட்டதாம்...' என்கிற ரீதியில் சேற்றை அள்ளிக் கொட்ட வசதியாகி விட்டது.

மற்றவர்களைப் பற்றிக் கூடப் பித்தோ கவலைப்படவில்லை. அவளை உயிருக்குயிராய்க் காதலிப்பதாய் நினைத்த ஈஷோன் கூட முனக ஆரம்பித்தான். "ஆண்கள் அத்தனை பேரும் கோழைகள்!" என்று பித்தோ புறங்கையால் அனைவரையும் ஒதுக்கினாள்.

சென்ஷியாங்கின் வயது கூடக் கூட, அவனையும் விளையாட்டுப் பிள்ளைகள், 'அப்பன் பெயர் தெரியுமாடா உனக்கு?' என்று வம்புக்கு இழுத்துச் சண்டையில் புரண்டார்கள்.

பித்தோ, அடுத்து வந்த நாட்களில் தன் உடலில் ஒரு மாற்றத்தை உணர்ந்தாள். வெயிலில் நின்று வேலை செய்தால் தலையைச் சுற்றியது. காலையில் படுக்கையிலிருந்து எழுந்திருக்கவே மனம் வருவதில்லை. கிணற்றில் நீர் இறைத்தால் நெஞ்சு வலித்தது.

இருபத்தொரு வயதில் இத்தனை களைப்பு வருமா என்ன?

ஒரு கரிய நாளில் அவள் நோயின் தீவிரம் அவளுக்குப் புரிந்தது.

**பி**த்தோவின் அப்பா வாசலில் கோழிகளுக்குத் தீனி போட்டுக் கொண்டிருக்கும் போது, சென்ஷியாங் அவரை நோக்கி ஓடி வந்தான்.

"தாத்தா... தாத்தா..."

"சீ! என்னைத் தாத்தா என்று அழைக்க யாரடா உனக்கு உரிமை கொடுத்தது?"

"தாத்தா, என்னை அடியுங்கள், திட்டுங்கள். ஆனால் அம்மா — அத்தையை மன்னித்து விடுங்கள். பாவம், நேற்று ராத்திரியெல்லாம் ரத்தமாய் வாந்தியெடுத்தாள்..." சென்ஷியாங் கண்ணீரைப் பெருக்கி அழ ஆரம்பித்தான்.

பித்தோவின் அப்பா அதிர்ந்தார். மகளைப் பார்க்க ஓடினார். அவர் போன நேரம் பித்தோவின் நிலை வெகு மோசமாகியிருந்தது.

**அ**ந்த மாட்டு வண்டி அசைந்து அசைந்து வந்தது. ஜேமி கைகளை வீசி நிறுத்தினான். வண்டியை ஓட்டி வந்தது பித்தோ இல்லை. யாரோ ஓர் ஆள். சில்லறையைக் கொடுத்துவிட்டு ஏறிக் கொண்டான். ஊர் எல்லையிலேயே இறங்கி பித்தோவின் வீட்டை நோக்கி ஓடினான்.

வீட்டு வாசலில் கவலை தோய்ந்த முகத்துடன் சென்ஷியாங் உட்கார்ந்திருந்தான். அப்பாவைப் பார்த்ததும் எழுந்து வீட்டிற்குள் ஓடினான். செய்தியைக் கேட்டதும் பித்தோவின் பெற்றோர் வெளியே வந்தனர்.

"ஜேமி எப்போது விடுதலை ஆனாய்?"

"நேற்று. என் மகனா இது? மூன்று வருடங்களில் அடையாளம் தெரியாத அளவுக்கு வளர்ந்து விட்டானே! பித்தோ எங்கே? நன்றிகளை எத்தனை கோடி கொட்டினாலும் அவள் செய்ததற்கு ஈடாகாது. என் மகனைத் தன் மகன் போல் அரவணைத்துக் கொள்வாளே... பித்தோ... பித்தோ எங்கே?"

"அதோ அங்கே..."

அவர்கள் சுட்டிக் காட்டிய இடத்தில் பித்தோ புகைப்படத்தில் சிரித்தாள். படத்திற்கு ரோஜா வைத்திருந்தது.

"ஐயோ.... பித்தோவிற்கு என்ன ஆயிற்று?"

"அம்மா — அத்தைக்குக் கான்சராம் அப்பா... டாக்டர்களால் கூடக் காப்பாற்ற முடியவில்லை..." சென்ஷியாங் அப்பாவின் கால்களைக் கட்டிக் கொண்டு அழ ஆரம்பித்தான். அழுது கொண்டேயிருந்தான்.

ஜேமி குனிந்து பித்தோ வசித்த அந்தப் பூமியில் தன் கண்ணீரை அஞ்சலியாக்கினான்.

— **ஜெயமன்மதன்**

**THE OUTCAST எனும் இந்தச் சீனப் படம் பத்திரிகை விமர்சகர்களால் 'மிகச் சிறந்த படம்' என்று சிறப்புப் பரிசு பெற்றது. நடிப்பு, கதையமைப்பு, உணர்ச்சி ததும்பும் வசனங்கள் எல்லாவற்றிலும் இந்தியக் கலாசாரத்தின் வாசனை இருந்தது ஓர் ஆச்சரியம். பரபரப்பான படங்களுக்கு நடுவே, நிதானமாக இதயத்தைத் தொட்ட படம்.**



# ஜூஸி

## அறிமுகம் இதோ ஜூஸி ஃப்ளேவர் க்ரிஸ்டல்ஸ்



மேங்கோ ஸ்ட்ராபெர்ரி பைனப்பிள் ரோஸ்



லைம் காலாகட்டா லெமனேடு






### திறப்பீர், தெளிப்பீர், இக்காலத் தீஞ்சுவை பரப்பிக் களிப்பீர்.

இதுவரை செய்தறியாத இலகு முறை. எண்ணிக்கோ 1-2-3 ஆச்சு: 1 பேக்கெட் புதிய ஜூஸி ஃப்ளேவர் க்ரிஸ்டல்ஸ் படிகங்களை ஒரு கூஜாவிலோ, பாத்திரத்திலோ போட்டு, 2. கப் சர்க்கரையும், 3 கப் நீரும் சேர்த்துக் கரைத்தால், முழுசாக 1 புட்டி (பாட்டில்) கான்ஸெண்ட்ரேட் கிடைத்திடும்.

இனிமையில் ஒன்றை ஒன்று மிஞ்சும் 8 விதமான பரவச நறுமணச் சுவைகள் உள்ளன.

ஒருக்காலும் சுவைத்திருக்க மாட்டீர்கள் இத்தகைய சுவையின்பம்—உங்களுக்கு, உங்கள் கண்மணிகளுக்கு.

OBM/8663/TAM



இந்தியாவிலே தயாரிப்போர்: கே.ஜி.எஃப்
கூட்டுத்துணை: ஜெனரல் ஃபுட்ஸ் கார்ப்., யூ.எஸ்.ஏ.

# கிரிக்கெட் உலகம் கற்றுக் கொள்ளட்டும்!



* ஜோ வேயான்

ஒலிபெருக்கியில் அவர் பெயர் அறிவிக்கப்பட்டபோது அந்தச் சீன நாட்டு டேபிள் டென்னிஸ் ஆட்டக்காரர் ஆட்டம் நடந்த அரங்குக்கு வெளியே விச்ராந்தியாக நின்று கொண்டிருந்தார். பரிசைப் பெறும் பொருட்டுத் தமது பெயர் இரண்டாவது முறையாக அறிவிக்கப்பட்டதும்தான் உயிர் பெற்று எழுந்தார். தாம் தாமதித்து விட்டதை உணர்ந்து எடுத்தார் ஓட்டம். சுமார் நூறு மீட்டர் தூரத்தை அதி வேகமாகக் கடந்து, சில நாற்காலிகளையும் இரண்டரை அடி உயரமான தடுப்புகள் பலவற்றையும் அநாயாசமாகத் தாண்டிக் குதித்து முன்னேறி, சிரித்தபடியே பரிசைப் பெற்றுக் கொண்டார். இத்தனை ஓட்டத்துக்குப் பிறகும் மனிதருக்கு மூச்சு வாங்க வேண்டுமே...? ம்ஹூம்! அவருடைய வலிமையான புஜங்கள் மருந்துக்குக் கூட அசையவில்லை!

இத்தகைய உடற்கட்டுப்பாடு ஓர் ஆட்டக்காரருக்கு எப்படி சாத்தியம் என்று அதிசயப்பட்டோம். ஆனால் அவர்களுடைய அன்றாடப் பயிற்சி அட்டவணையைப் பற்றித் தெரிந்த பிறகு அந்த ஆட்டக்காரர் அப்படி மின்னலைப் போல் ஓடி வந்ததில் ஆச்சரியமே இல்லை என்று தோன்றியது.



* முதலிடத்தை மயிரிழையில் கைநழுவ விட்ட யூகோஸ்லாவிய அணி

போட்டிகள் பற்றிய அறிவிப்பு வந்ததுமே சீன டேபிள் டென்னிஸ் வீரர்கள் பயிற்சியைத் தொடங்கிவிடுகிறார்கள். அணி உறுப்பினர்கள் ஆறு மாதங்களுக்கு முன்னரே தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். நாளொன்றுக்கு எட்டு மணி நேரம் பயிற்சி! இதில் உடற்பயிற்சிக்கு மட்டுமே சுமார் இரண்டு மணி நேரம் ஒதுக்கப்படுகிறது! அப்புறம் அந்த உடம்பு சொன்னபடியெல்லாம் ஏன் கேட்காது? பிங்பாங் பந்து மாதிரி ஏன் எகிறிக் குதிக்காது?

போதாக் குறைக்குச் சீன அணியுடன் கூடவே ஒரு மருத்துவர் வருகிறார். ஆட்டங்களுக்கு முன்பும் இடையில் நேரம் கிடைக்கும் போதும் ஆட்டக்காரர்களின் உடலையும், கைகால்களையும் நன்றாகப் பிடித்துவிட்டுப் புத்துணர்ச்சி ஏற்றுகிறார்.



* உலக சாம்பியனுக்கு மஸாஜ்

* பத்தொன்பதிலிருந்து இருபத்தைந்துக்குச் சறுக்கிய பெண்கள் அணி



நம் நாட்டுக் கதை... அதுதான் தெரிந்த கதை ஆயிற்றே. போட்டிக்கு ஒரு மாதம் இருக்கும்போதுதான் அணி தேர்ந்தெடுக்கப்படுகிறது. அதிலும் ஆயிரம் சண்டை சச்சரவுகள். இதெல்லாம் போக மிஞ்சும் கொஞ்சம் நேரத்தில்தான் பயிற்சி. இந்நிலையில், சென்ற முறை பன்னிரண்டாவது இடத்திலிருந்த இந்திய ஆண்கள் அணி பதினொருவது இடத்துக்கும் பத்தொன்பதாவது இடத்திலிருந்த பெண்கள் அணி இருபத்தைந்தாவது இடத்துக்கும் தள்ளப்பட்டதில் என்ன ஆச்சரியம்?

**ஜோ** கிடியான் என்றொரு கானடா நாட்டு டேபிள் டென்னிஸ் வீரர். இவருடைய வழுவழுப்பான, இளம் முகத்துடன், போட்டி போட்டுக்கொண்டு மின்னியது இவருடைய மொட்டைத் தலை! வேடிக்கையாக மொட்டைக்குக் காரணம் கேட்கப் போய், அவர் சொன்ன கதையைக் கேட்டு, அசந்து போனேன்—நரம்பு சம்பந்தமான சிகிச்சைக்காக மருத்துவமனை சென்றிருந்தாராம் கிடியான். பரிசோதனைகளில் அவருக்குக் 'கான்சர்' இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. சென்ற ஆண்டு அறுவைச் சிகிச்சையும் செய்யப்பட்டது. அதன் பிறகு கான்சர் அறிகுறி ஏதும் தோன்றவில்லை எனினும் முன்னெச்சரிக்கை நடவடிக்கையாக 'கீமோ தெரபி' என்ற ஒரு வகை சிகிச்சையை அவருக்கு அளித்தார்கள். அதன் விளைவாகத்தான் தலையிலிருந்த மயிரெல்லாம் கொட்டி மொட்டையாகிவிட்டாராம்.

முன்பிருந்த சக்தியுடன் தம்மால் விளையாட முடியவில்லை என்று வருத்தப்பட்டுக் கொண்டார் கிடியான். ஆனால் அவர் கண்களில் என்னவோ லேசான சோகத்தையும் மீறிய உறுதி தெரிந்தது. இல்லாவிட்டால் காமன்வெல்த் நாடுகளைச் சேர்ந்த டேபிள் டென்னிஸ் ஆட்டக்காரர்களுள் பத்தாவது நிலையில் அவர் இன்று இருக்க முடியுமா?

ரோர் பினிக்கென் என்ற இருபது வயது இளைஞர் நார்வேயிலிருந்து வந்திருந்தார். இவர் மூன்று வயதுச் சிறுவனாக இருந்த போது இவர் வீட்டில் ஒரு பெரிய தீ விபத்து ஏற்பட்டு, இவருடைய இரட்டைச் சகோதரர்களும் தாத்தாவும் அதில் இறந்து போனார்கள். பினிக்கென்னின் வலது கை விரல்கள் அனைத்தும் கருகிவிட்டன. முகத்தில் ஏற்பட்ட தீக்காயத்தின் தழும்புகள் இன்னும் இருக்கின்றன. இந்த விபத்துக்குப் பிறகு பினிக்கென்னை அதிகம் வெளியில் அனுப்பாமலே இருந்துவிட்டார்கள் அவர் பெற்றோர்கள். வீட்டிற்குள்ளேயே விளையாடக் கூடிய ஆட்டமான டேபிள் டென்னிஸைத் தேர்ந்தெடுத்து மிகச் சிறந்த இடதுகை ஆட்டக்காரராக இப்போது விளங்குகிறார் இவர்.

முப்பத்தொன்பதாவது உலக டேபிள் டென்னிஸ் சாம்பியன்ஷிப் போட்டிக்குப் போயிருந்த போது இப்படிச் சில நம்பிக்கை நட்சத்திரங்களைச் சந்தித்தது சந்தோஷமாக இருந்தது. ஆனால் மிகவும் மகிழ்ச்சி அளித்த விஷயம் என்னவென்றால் பெரும்பாலான ஆட்டக்காரர்கள் நடுவரின் கவனம் சிறிது பிசகினாலும் எதிராளிக்கு உரிய பாய்ண்ட்டைத் தரச் சொல்லிச் சுட்டிக் காட்டியதுதான். இந்த ஆரோக்கியமான மனப்பான்மையைக் கிரிக்கெட் உலகம் கற்றுக் கொள்ளட்டும்.

கட்டுரை, புகைப்படங்கள்:

**ஏ. எஸ். திவாகர்**

---

அடுத்த இதழில்......

# 10,000 கண்ட காவஸ்கர்



**COVER STORY**



வாழ்க்கை:—

# வேடிக்கைகள், விநோதங்கள், விசனங்கள்!

சதீஷ் சர்மா எடுத்த அற்புதப் புகைப் படங்கள்! அவற்றுக்கேற்ப முன்னணிக் கவிஞர்களின் புதுக் கவிதைகள்!

# 24 வயதினிலே, ஹேர் ஸ்டைல், திருமணம், புதிதாகச் சேர்ந்த வேலை, இவற்றிலேதான் எப்போதும் உங்கள் கவனம். 'பொக்கிஷம் போன்ற 32 பற்களை'ப் பற்றி உங்களுக்கு நினைப்பதற்கு நேரமேது?



**அச்சமயங்களில் போர்ஹேன்ஸ் பல்பராமரிப்பு உங்களைக் கவனிப்பதில் மிகவும் அக்கறை காட்டுகிறது.**

பொழுது புலரும்போது புது வாழ்வினையே சிந்திக்கத் துவங்குகிறீர்கள். நீங்கள் புதிதாகச் சேர்ந்த வேலை, புதிய திருமணம், ஹேர் ஸ்டைல் இவற்றைப் பற்றிச் சிந்திக்கும் அளவுக்கு நீங்கள் பல் பராமரிப்பிலே 'ஏனோதானோ' தான்.

நீங்கள் 'ஏனோதானோ' என்றிருந்தால் 'பொக்கிஷம் போன்ற உங்கள் 32 பற்களும்' கற்பனை செய்யமுடியாத அளவுக்கு பாதிக்கப்படும்.

வெறும் உங்கள் டூத்பேஸ்ட் பற்களை மட்டும் சுத்தப்படுத்துகிறதா அல்லது ஈறுகளையும் கெட்டிப்படுத்துகிறதா? மூச்சிலே புத்துணர்ச்சியை மட்டும் அளிக்கிறதா அல்லது ஈறுகளையும் உறுதிப்படுத்துகிறதா?

போர்ஹேன்ஸ் தன் பல்வகைப் பல் பராமரிப்புகளால் இத்தகைய விஷயங்களைக் கவனிப்பதில் அக்கறை காட்டுகிறது.

உதாரணமாக, போர்ஹேன்ஸ் டூத்பேஸ்ட் மற்றும் டூத் பவுடர் ஒப்பற்ற அஸ்ட்ரின்ஜெண்ட் கொண்டவையாகும். இது பற்களுக்கு உறுதியான அஸ்திவாரம் அளிப்பதற்கு ஈறுகளை வலுப்படுத்துகிறது. ஆகவே அவை நீடித்த ஆயுளைப் பெறுகின்றன. ஈறுகள், பற்களுக்கு பாதுகாப்புப் பிடிமானம் அளிப்பதால் துர்நாற்றம் உண்டாக்கும் பாக்டீரியாக்கள் உருவாக இடமளிப்பதில்லை. அதாவது சுவாசத்தில் துர்நாற்றத்தை தடுக்கிறது.

இதுமட்டுமல்ல, கேவிட்டி ஃபைட்டர் போர்ஹேன்ஸ் ஃப்ளோரைட், அமிலத் தாக்குதலைத் தடுத்திட பல் எனாமலை ஆற்றலுடன் கெட்டிப்படுத்துகிறது.

போர்ஹேன்ஸின் டூத்பிரஷ் கூட இரட்டைச் செயல் கொண்டதாகும். பற்களுக்கு பளிச்சிடும் வெண்மையூட்டி ஈறுகளையும் தேய்த்துக் கொடுக்கிறது.

நாங்கள் சொல்வதை நீங்கள் அப்படியே ஏற்க வேண்டுமென்பதில்லை. போர்ஹேன்ஸை உபயோகித்துப் பார்த்த பின்பே அதன் உண்மை மதிப்பை அறிய முடியும் என்பது உங்களுக்குத் தெரியும்.



**போர்ஹேன்ஸ்**
பராமரிப்பு
32 என்றும் பத்திரம்

போர்ஹேன்ஸ் டூத்பேஸ்ட்
போர்ஹேன்ஸ் ஃப்ளோரைட் டூத்பேஸ்ட்.
போர்ஹேன்ஸ் டூத்பவுடர்.
போர்ஹேன்ஸ் டூத்பிரஷ்.



# அன்னைபூமி— பொன் முட்டையிடும் வாத்து! அதனை அழிய விடாதீர்!

அன்னை பூமி நமக்கு இருக்க இடமும் வசதியாக வாழ வளமும் அளிக்கிறது.

இதை உணர்ந்திருந்த நமது முன்னோர், இயற்கையோடு உறவு கொண்டு வாழ்ந்தார்கள்; இயற்கையைத் தெய்வமாகத் தொழுதார்கள்.

ஆனால் கடந்த சில நூற்றாண்டுகளாக, விஞ்ஞானத்தின் வளர்ச்சியில் எங்கும் தொழில் மயமாயிற்று.

தொழில் வளம் காண விரும்பிய மனிதன் இயற்கையை அளவுக்கு மீறி பயன்படுத்தலானான். கனி வளங்களை எடுக்க பூமியைத் தோண்டினான். இரும்பு, நிலக்கரி, பெட்ரோல் என்ற இயற்கையின் வளங்களை விரைவில் காலி செய்து வரலானான்.

மனிதனின் கோரப்பசிக்கு மலைகளும், மலைகளைச் சார்ந்த காடுகளும் பலியாயின.

பல நூற்றாண்டுகளுக்குத் தொடர்ந்து பலன் தரவிருந்த கனிமரங்களை, காட்டுவளத்தை, இயற்கைச்செல்வத்தை, நீர்ப்பெருக்கத்தை ஒரே நூற்றாண்டில் தீர்த்துவிட்டால் வருங்காலம் என்னாவது?

**சிந்திப்பீர்! செயல்படுவீர்!**

மரங்களை வளர்ப்பீர்!

மண்வளத்தை பாதுகாப்பீர்!

நீரை மாசுபடுத்தாதீர்!

சுற்றுப்புறத் தூய்மையைப்பாதுகாப்பீர்!

இதுவே நமது குறிக்கோளாக அமையட்டும்.

> **தொழிற்சாலையிலிருந்து மாசு உண்டாக்கும் கழிவு நீரையும் நச்சுப் புகையையும் பொது இடங்களில் கலக்கவிடுவது சட்டப்படி குற்றமாகும்.**






வெளியிடுவோர் :
சுற்றுப்புறத் தூய்மைக் கட்டுப்பாடுத் துறை
சென்னை 600 009

DIPR/590/MS/87 ADWAVE/DEPC/3158

# மனைவியின் காதலன்!

கா.சு.வேலாயுதன்

புயலென உள்ளே நுழைந்த அவன், அவர் முன்னே நின்று —

''சார்....'' என்றான்.

— அனுமதியில்லாமல் உள்ளே நுழைந்து, அதிகார மிடுக்கோடு தன்னை அழைக்கும் அந்தக் குரலுக்குரியவனை மெதுவாக ஏறிட்டார் ராக்கியப்பன்.

''யாரப்பா நீ.... என்ன விஷயம்?''

ராக்கியப்பனின் ஒற்றை வரிக்குப் பதிலாக ஓராயிரம் வரிகளை உதிர்த்து விடும் அவசரத்துடன் வந்தவனின் குரல், அந்த அறையில் ஓங்கி ஒலித்தது!

''சார்... எம் பேரு ஆனந்த்.... நான் உங்ககிட்ட பர்ஸனலா....''

— என்று கூறிவிட்டு, சட்டென்று பேச்சை நிறுத்தி, சுற்றுமுற்றும் பார்த்தான். அவன் மனம் அவரைத் தவிர அங்கு யாருமில்லை என்பதைஉறுதிசெய்திருக்க வேண்டும்! உடனே,

''சார்... உங்க மனைவி ரோகிணியைப் பத்திக் கொஞ்சம் தனியாப் பேசணும்! உட்காரலாமா?''

தயக்கம், அவன் குரலில் தான் இழையோடியதே தவிர செயலில் அது ஒரு துளியும் இருக்கவில்லை! அவர் உட்காரச் சொல்லு முன்பே, சட்டென அவருக்கு எதிர் இருக்கையில் அமர்ந்தான்.

ராக்கியப்பன் தன் மூக்குக் கண்ணாடியை அதன் இருப்பிடத்திலிருந்து கழற்றி எதிரேயிருந்த மேஜைக்கு மாற்றினார். கண்களை அழுந்தத் துடைத்துக் கொண்டவர், அவனையே வைத்தகண் மாறாமல் சிறிது நேரம் பார்த்தார்.

''எம் மனைவியைப் பத்திப் புதுசா என்னப்பா சொல்லப் போறே....? அவ நடத்தைகெட்டவ.... காலேஜுல எங்கூட சுத்திகிட்டிருந்தா... நாங்க ரெண்டு பேரும் ஜோடியா எடுத்த போட்டோ கூட எங்கிட்டே இருக்கு.... எனக்கு அவ எழுதிய லவ் லெட்டர்ஸ் எல்லாம் உங்ககிட்ட காட்டத். தயாராயிருக்கேன்! இதைத்தானே நீ இப்பச் சொல்லப் போறே...?''

அலட்சியமாக வார்த்தைகளை அடுக்கினார்.

''சார்....!'' ஆனந்த் அதிர்ந்தான்.

''ஏம்ப்பா, இப்படிக் கத்தறே.... இதெல்லாம் எனக்குத் தெரிஞ்சுருக்கேன்னு உனக்கு அதிர்ச்சியாயிருக்கா... இப்ப நீ எங்கிட்ட சொல்ல நினைச்சதை நான் சரியாத்தானே சொன்னேன். இது தப்பா....?''

''அப்போ.... உங்க மனைவி இந்த விஷயத்தை முழுவதும் உங்ககிட்டே சொல்லிட்டாங்களா....?''

''சொல்லிட்டாளாவா? நீ மூணு மாசமா அவளுக்கு எழுதின பிளாக் மெயில் கடிதமெல்லாம் இப்ப எங்கிட்டதான் இருக்கு! நீ கடைசியா எங்கிட்ட இன்னைக்கு வந்து விஷயத்தைவெட்டவெளிச்சமாக்கப்போறேன்னு போன வாரம்' அவளுக்கு எழுதின கடிதம் கூட எங்கிட்டதான் இருக்கு... தெரிஞ்சுக்க....!''

முகத்தில் எந்தச் சலனமுமில்லாது பேசினார் ராக்கியப்பன்!

ஆனந்த் மேலும் அதிர்ந்தான்.

''சார்.... அப்ப, நீங்க... நீங்க....!''

''ஏம்ப்பா ஆனந்த் பயந்து சாகறே...? நீ உனக்கும் அவளுக்கும்' உள்ள தொடர்பை எங்கிட்ட சொல்லிடுவேன்னு அவளைப் பய



முறுத்தியிருக்கே! இதைத் தவிர்க்கணும்னு பத்தாயிரம் ரூபாய் பணத்தை உடனே அவ உனக்குத் தந்தாகணும்னு மிரட்டற கடித மெல்லாம் எழுதினியே அதை இப்ப நான் உனக்குக் காட்டணுமா....?''

ஆனந்தின் முகம் ராக்கியப்பன் பேசப் பேசப் பாறையாக இறுகிக் கொண்டே போனது!

தான் பிளாக் மெயில் செய்த விஷயத்தை ரோகிணி தன் கணவனிடமே வெட்ட வெளிச்சமாக்கிவிட்டாள்! எப்படியாவது இவர்களிடமிருந்து பத்தாயிரம் ரூபாய் கறந்தாக வேண்டும்! என்ன செய்வது....?

யோசித்தவனின் மூளையில் திடீரென்று ஒரு 'பளிச்'...

இந்த ராக்கியப்பனையே இப்போது பிளாக் மெயில் பண்ணினால் என்ன....? மூளையை மீண்டும் கசக்கிக் கொண்டான்.

''மிஸ்டர் ராக்கியப்பன்.... உங்ககிட்டே இந்த விஷயத்தை உங்க மனைவி சொல்லிட்டாங்க. சரிதான்! ஆனால், உங்களுக்குத் தெரிஞ்சிருக்கிற விஷயத்தை உங்க ஆபீஸ்ல... உங்க சொந்தக்காரங்ககிட்ட... உங்கக் கண்ணுக்குக் கண்ணான ரெண்டு பொண்ணுங்ககிட்ட, ஆதாரபூர்வமா விண்டு, விண்டு சொல்லி, உங்க மானம் மரியாதையை பீஸ் பீஸாக்கிடுவேன்.... பேசாம நான் கேட்ட பணம் பத்தாயிரத்தைக் கொடுத்துடுங்க...''

குரலில் ஒரு புதிய மிடுக்கை வரவழைத்துக் கொண்டு பேசினான் ஆனந்த். ராக்கியப்பன் பழைய நிதானம் மாறாமலேயே அவனைப் பார்த்தார்.

''ஏம்ப்பா....நீ யாரை அவமானப்படுத்தப் போறே...? எம் மனைவியையா, இல்லே என்னையா....?''

''உங்க மனைவியைத்தான்ங்கறதுல உங்களுக்கென்ன சந்தேகம்....?''

''செத்துப் போனவளைப் போயி அவமானப்படுத்தப் போறியா....?'' ராக்கியப்பனின் கேள்வியில் இளக்காரம் புரையோடியது!

மூன்றாவது முறையாக ஆனந்த் அதிர்ந்தான்!

''என்ன... உண்மையாகவா?''

அவன் கண்கள் கேள்விக்குறியாய் வெளிச்சம்போட, ராக்கியப்பன் அண்ணாந்து அந்த அறையின் சுவரைப் பார்த்தார்.

அங்கு —

அவர் மனைவி ரோகிணி நான்கு சட்டங்களுக்குள் பூமாலை சார்த்தப்பட்டுச் சிரித்துக் கொண்டிருந்தாள்!

ஆனந்த் அதிர்ச்சியில் எழுந்தேவிட்டான். 'இந்தப் படத்தை தான் வந்ததிலிருந்து எப்படி கவனிக்காது இருந்தோம்?' அவனுள் கேள்வி இழையோட ஏதும் பேசத் தோன்றாமல் எழுந்தவன், அப்படியே திரும்பி நடக்க ஆரம்பித்தான்!

''டேய்.... நில்லுடா.... எங்கேடா போறே?''

கேள்வி உக்கிரமாய் ராக்கியப்பனின் வாயிலிருந்து உதிர, இதுவரை மனத்தில் எழாத ஒருவித பயம் அவன் மூளையைத் தாக்கியது!

அவனை எட்டிப் பிடித்தார் ராக்கியப்பன்.

''டேய்.... நீ அவளை மூணு மாசமாவே பிளாக் மெயில் பண்ணிட்டு வந்திருக்கே! அதை அவ கடைசி வரைக்கும் எங்கிட்டச் சொல்லப் பயந்துகிட்டுப் பேசாமலேயே இருந்துட்டா. அவளைப் பத்தி எங்கிட்டச் சொல்லிடுவேன்னு உன்னோட கடைசி கடிதத்தில் மிரட்டினதும் அவளால அந்த அதிர்ச்சியையும்பயத்தையும்தாங்கமுடியலே. ஒரு வாரம் முந்திதான் விஷம் சாப்பிட்டுத் தற்கொலை செஞ்சுகிட்டா. அவ கடைசியா எழுதி வச்சுட்டுப் போன கடிதத்தைப் படிச்சுதான் உன்னைப் பற்றியும், உன்னோட இந்தச் சில்லறைத்தனத்தையும் தெரிஞ்சுக்கிட்டேன்....!''

''சார்... நீங்க..., நீங்க...!''

''என்னடா தடுமாறரே... உன்னைத்தான் நான் ஒரு வாரமா எதிர்பார்த்துட்டிருந்தேன். இப்ப நல்ல வசமா மாட்டிக்கிட்டே. எம் மனைவி ரோகிணியோட சாவுக்குக் காரணமான உன்னை இப்பவே போலீஸ்லே பிடிச்சுக் கொடுக்கப் போறேன்....!''

ஆனந்த்தின் முகம் அவர் பேசப் பேசச் சவக்களை கட்டிக் கொண்டே வந்தது! திடீரென்று அவருக்கு முன்னால் நெடுஞ்சாண் கடையாக விழுந்தான் அவன்!

''ஐயா, என்னை மன்னிச்சுடுங்க.... ஐயா... நான் இது இவ்வளவு தூரம் விபரீதமாப் போகும்னு தெரியாம தப்பு செஞ்சுட்டேன். என்னை மன்னிச்சுடுங்க ஐயா....!''

காலில் விழுந்து கெஞ்சும் அவனையே பார்த்தார். ராக்கியப்பன். பின்பு —

''சரி...: சரி.... எழுந்திரு! உன்னைப் பத்தி ரோகிணி எழுதின கடிதமும் நீ அவளை பிளாக்மெயில்பண்ணி எழுதினகடிதங்களும் எங்கிட்டதான் இருக்கு! அதுவுமில்லாம போலீஸ்ல ரிப்போர்ட் வேறே செஞ்சிருக்கேன்! இப்ப மட்டுமல்ல...... எப்ப நினைச்சாலும் உன்னைப் போலீஸ்ல மாட்டி வைக்க என்னால முடியும்!''

''சார்....!''

''ஆமாம்... கடைசியா உனக்குச் சொல்

---

*மனைவி : உடனே ஊருக்கு லெட்டர் போட்டு உங்கம்மாவை வரச் சொல்லுங்க!*

*கணவன் : அதிசயமாயிருக்கே! அப்படி என்ன அவசரம்?*

*மனைவி : குழாயடியில் ஒத்தையா சண்டை போட்டு ஜெயிக்க முடியலே!*

— எஸ். மீனலோசனி



றேன். ரோகிணி உனக்கு வாலிபத்துல எழுதின கடிதங்கள், அனுப்பிய போட்டோ எல்லாத்தையும் ஒண்ணு விடாம இப்பவே குடுத்துட்டு, அடுத்த நிமிஷமே நீ இந்த ஊரை விட்டு வெளியேறணும்! மறுபடி இந்த ஊருக் குள்ளே காலடி எடுத்து வச்சே... அப்புறம் கம்பி எண்ண வேண்டியதுதான்!'' — ஒரு புலியின் உறுமலாகக் கர்ஜித்தது ராக்கியப் பனின் குரல்.

ஆனந்தனுக்கு இப்போதைக்கு அவர் தன்னை விட்டால் அதுவே தான் செய்த பூர்வ ஜன்ம புண்ணியம் என்பது விளங்க வெகு நேரமாகவில்லை! பரபரவென்று தான் கொண்டு வந்திருந்த கறுப்பு நிற தோல் பையைப் பிரித்தான்! அதில் அடைக்கலமாகி யிருந்த பல கடிதங்களையும், பழைய போட் டோக்களையும் நடுங்கும் கரங்களால் தாறு மாறாக எடுத்து, ராக்கியப்பனின் கைகளில் திணித்துவிட்டு அவருக்கு ஒரு பெரிய கும்பிடு போட்டுவிட்டுத் திரும்பிப் பாராமல் நடக்க ஆரம்பித்தான்.

அவன் வெகு தூரம் சென்று மறையும் வரை வாசலையே பார்த்தவாறிருந்த ராக்கி யப்பன் அறையின் நடுவே கிடந்த ஸ்டூலை எடுத்துச் சென்று சுவரோரம் போட்டு அதன் மீது ஏறி நின்று போட்டோவின் மேல் சார்த்தப்பட்டிருந்தபூமாலையைக்கழற்றினார்.

உள் அறையை நோக்கி அவர் குரல் கொடுக்கவும் வெளிப்பட்ட ரோகிணி, "என் னங்க, அவனை அனுப்பிச்சுட்டீங்களா ...?" என்றாள், சந்தோஷம் கலந்த பயத்துடன்.

''பயப்படாதே ரோகிணி.....! அவன் இனி மேல் இந்த ஊர்ப் பக்கம் தலை வச்சு கூடப் படுக்க மாட்டான். அந்த அளவுக்கு அவனை மிரட்டி அனுப்பிச்சுட்டேன்.....!'' என்று கூறியவர் தொடர்ந்து,

''நல்லவேளை, இவனைக்காதலிச்சு ஏமாந்த விஷயத்தை கல்யாணத்துக்கு முந்தியே என் கிட்டச் சொல்லியிருந்தே! நானும் அப்பவே உன்னை மனப்பூர்வமா ஏத்துக்கிட்டேன்! இத்தனை வருஷமா எங்கேயோ தெருப் பொறுக்கிக்கிட்டிருந்தவன் உன்னை இந்த ஊர்ல பார்த்ததும், உன்னைப் பத்தி எங்கிட்ட யும், நம்ம பொண்ணுங்ககிட்டயும் சொல் றேன்னு பயமுறுத்தினான். எனக்கு உன்னைப் பத்தி எல்லா விவரமும் தெரியும்! ஆனா, வயசுக்கு வந்த நம்ப பொண்ணுங்ககிட்டே உன்னைப் பத்தி இவன் தாறுமாறாச் சொன்னா, அதுக உன்னைப் பத்தி என்ன நினைக்கும்? அதுதான் அவன் இன்னைக்கு வருவான்னு தெரிஞ்சதும் இந்தப் புது வழியைக் கையாண்டேன். நீ உயிரோட இருக்கும் போதே உன்னோட படத்துக்கு மாலை போட்ட துக்கு என்னை மன்னிச்சுடு ரோகிணி.....!''

கணவனின் பெருந்தன்மையை எண்ணி சந்தோஷம் பொங்க நின்றிருந்தாள் ரோகிணி.

ராக்கியப்பன், பேசியபடியே, மேஜையில் வைத்திருந்த தம் மனைவியின் காதல் கடி தங்களையெல்லாம் சுக்கல் சுக்கலாகக் கிழித் துக் கொண்டிருந்தார்.

*** கடவுள் இருக்கிறாரோ இல்லையோ, கடவுள் இருக்கிறார் என்ற நம்பிக்கையும் மதச் சடங்குகளும் உலக மக்களுக்கு நன்மையே செய்துள்ளதை மறுக்க முடியாது.

# பரிசு ரூ. 200/-

## பொன்மொழிப் போட்டி — 13

இந்த இதழின் உள்பக்க மார்ஜின்களில் ஐந்து பொன்மொழிகள் அச்சாகியுள்ளன. அவற்றைக் கீழே உள்ள ஐந்து பெயர்களுடன் பொருத்தி, வெற்றிடத்தில் பிழையின்றி முழுமையாக எழுதுங் கள். விலாசத்தைப் பூர்த்தி செய்து, இந்த அரைப் பக்கத்தை முழுமையாகக் கத்தரித்து அனுப்புங் கள். ஒருவருக்கு மேல் சரியான விடை எழுதினால் பரிசு பகிர்ந்து அளிக்கப்படும். உறையின்மேல் 'பொன்மொழிப் போட்டி — 13' என்று அவசியம் குறிப்பிடவும்.



ராஜாஜி:

காந்திஜி:

பெர்ட்ரண்ட் ரஸ்ஸல்

ராமகிருஷ்ண பரமஹம்ஸர்:

சத்ய சாயி பாபா:

முடிவு தேதி: 15.4.87

என் பெயர்: ..............................

விலாசம்: ..............................

..............................



# மஹா கும்பாபிஷேக கமிட்டி

(ஸ்ரீ குருவாயூரப்பன் ஆஸ்திக சமாஜம்)

ஸ்ரீ உத்தர குருவாயூரப்பன் கோயில்,

ராம் நகர், நங்கநல்லூர், சென்னை-600 061.

## பக்தர்களுக்கு ஒரு வேண்டுகோள்

சென்னையை அடுத்துள்ள நங்கநல்லூரில்
ஸ்ரீ உத்தர குருவாயூரப்பன் ஆலயம்
1975-ல் அமைக்கப்பட்டு பன்னிரண்டு ஆண்டுகள்
நிறைவு பெறுவதை முன்னிட்டு
4-5-1987 அன்று த்வாதசாப்த பூர்த்தி
மஹா கும்பாபிஷேகம் நடைபெற உள்ளது.
இதன் தொடர்பாக சுமார் 3 லட்சம் ரூபாய் செலவில்
திருப்பணி வேலைகள் நடைபெற உள்ளன.
ஆஸ்திக அன்பர்கள்
தங்களால் இயன்ற தொகையை
'ஸ்ரீ குருவாயூரப்பன் ஆஸ்திக ஸமாஜம்,
நங்கநல்லூர், சென்னை-600 061'
என்ற முகவரிக்கு அனுப்பி வைத்து
ஸ்ரீ குருவாயூரப்பனின்
பேரருளைப் பெற வேண்டுகிறோம்.



# முத்துக்கள் மூன்று

பளபள அரிவாளுடன் வந்து சத்ய ராஜ், ராதாரவியை வெட்டிச் சாய்க்கும் காட்சியைப் பாதிரியார் சிவாஜி பார்த்து விடுகிறார். பாதிரியார் சிவாஜிக்கோ, அந்த உண்மையைக் கோர்ட்டில் சொல்ல முடியாத தர்ம சங்கடம். என்ன ஆகிறது? சிவாஜியின் வளர்ப்புப் பெண்ணை ரஞ்சினி யின் கணவன் கொலைகாரப் பட்டம் பெற்று ஜெயிலுக்குப் போக நேரிடுகிறது!

எடுத்துக் கொண்ட சிக்கல் சுவையானது தான். ஆனால் எடுத்த விதம் என்று ஒன்று இருக்கிறதே....?

பாதிரியாராக சிவாஜி. அந்தக் குறுந் தாடி, மெலிந்துவிட்ட கன்னம், ஜீவன் குறைந்த கண்கள். பழைய சிவாஜியா இது? எந்தப் படத்தில் தோன்றினாலும் தனக் கென்று ஒரு முத்தை மூழ்கித் தேடி எடுத்துத் தக்க வைத்துக் கொள்வார் சிவாஜி. இந்தப் படத்தில் ஸார், அலட்டிக் கொள்ளவே இல்லை! ஐம்பத்தைந்து நிஜமாகவே களைத்து விட்டதா என்ன?

சத்யராஜ் காடுமேடெல்லாம் டேப்ரிகார்டர் சகிதம் நடக்கிறார். சண்டை போடுகிறார். கனவில் (அம்பிகாவின்) அம்பிகாவுடன் டூயட் பாடுகிறார். மற்றபடி இவரைப் பற்றியும் குறிப்பிட்டுச் சொல்லுகிற மாதிரி ஒன்றுமில்லை. ஸாரி சத்யராஜ்.

பாண்டியராஜன்தான் மூன்று முத்துக் களில் கலகல முத்து. அவருடைய உருவம், கோணங்கிப் பேச்சு, விளையாட்டுத்தனமு மில்லாமல், ஸீரியஸ்னெஸ்ஸூம் இல்லாமல் கதையை அவர் நடத்திச் செல்கிற சிற்சில காட்சிகள் — கைதட்டலைப் பெற வைத்து விட்டன.

இந்த ராதாரவிக்குப் பெண்களைத் தொடருவது தவிர வேறு எந்த வேலையும் இடையாதா? முதலில் ரஞ்சினி. அப்புறம் இந்திரா. அப்புறம் அம்பிகா. இரட்டை வேஷத்தில் அவர் சக்கைப் போடு போட்டிருக்கிறார் என்றாலுங்கூட, அவரைப் பழி வாங்கத்தான் முழுக் கதையும் என்று சொல்லி விடுகிறார்களா? ச்சே, வெகு சாதாரணமான இந்தப் பழிக்குப் பழி கதைக்கா இத்தனை ஜமா என்று தோன்றி விடுகிறது.

சப்பாத்திக் கள்ளி மேல் விழுந்து ரஞ்சினி குருடாகிப் போவது பார்ப்பவர் அனுதாபத் தைத் தேடிக் கொள்வதற்காக என்றால், டைரக்டருக்கு ஃபெயில் மார்க். ரஞ்சினி குருடாகி இருக்கவே வேண்டாம்.

அம்பிகாவுக்கு ஜாக்கெட் பஞ்சம் இந்தப் படத்தில். சத்யராஜிடம் ஒட்டி ஒட்டிப் பழகு வதும், அசிங்க அசிங்கமாகப் பேசுவதும் — குமட்டல்.

கதை திடீரென்று காட்டுப் பகுதிக்குப் போய் விடுகிறதா? இரண்டுங்கெட்டான் வெளிச்சத்தில் காட்டுக்குள் நடக்கும் அர்த்த மில்லாக் காட்சிகள் அலுப்பு தட்ட வைத்து விடுகின்றன.

கோர்ட்டில் பாண்டியராஜனுக்கு மட்டும் அப்படிப் பேச "ஒரு ஸ்பெஷல் உரிமையை யார் கொடுத்தது?" என்றாலும் கலகலப்பு கருதி ஜீரணிக்க முடிகிறது.

டி. ராஜேந்தர் இசை. மூன்று பாடல்கள் கேட்கும்படி!

மாவு என்னவோ நல்ல மாவுதான். பணியாரத்தைச் சுட்ட விதம்தான் சரியில்லாமல் போய்விட்டது.

— ஜெயமன்மதன்

*** மனிதனுக்குத் சோதனைகள் ஏற்படும் போதுதான் தன்னிடமுள்ள குறைகளை உணர்கிறான்.

# பொன்னியின்

## அத்தியாயம் 27

## ஆஸ்தானப் புலவர்கள்

பராக்! பராக்! இதோ வருகிறார்கள் புலவர் பெருமக்கள்! கவிஞர் சிகாமணிகள்! தமிழ்ப் பெருங்கடலின் கரை கண்டவர்கள்! அகத்தியனாரின் வழி வந்தவர்கள்! தொல்காப்பியம் முதலிய சங்க நூல்களைக் கரைத்துக் குடித்தவர்கள்! சிலப்பதிகாரம் முதலிய ஐம்பெருங் காவியங்களைத் தலைகீழாகப் படித்தவர்கள்! தெய்வத்தமிழ் மறையான திருக்குறளையும் ஒரு கை பார்த்தவர்கள்! இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் அறிந்தவர்கள்! இலக்கணம் கூறியதற்கு இலக்கியம் தெரிந்தவர்கள்! தாங்களே சுயமாகவும் கவி பாட வல்லவர்கள். அவர்கள் ஒவ்வொருவரும் எழுதிய கவிகள் அடங்கிய ஏட்டுச் சுவடிகள் கோடானு கோடி கரையான்களுக்குப் பல்லாண்டு உயிர் வாழ்வதற்கு உணவாகும் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்!



புலவர் பெருமக்கள் அவ்வளவு பேரும் கும்பலாகச் சுந்தர சோழ சக்கரவர்த்தியின் சந்நிதானத்துக்கு வந்து சேர்ந்தார்கள்.

"வாழ்க! வாழ்க! ஏழுலகமும் ஒரு குடையின் கீழ் ஆளும் சுந்தர சோழ மகா சக்கரவர்த்தி வாழ்க! பாண்டியனைச் சுரம் இறக்கின பெருமாள் வாழ்க! புலவர்களைப் புரக்கும் பெருமான் வாழ்க! கவிஞர்களின் கதியான கருணை வள்ளல் வாழ்க! பண்டித வத்ஸலராகிய பராந்தக சக்கரவர்த்தியின் திருப்பேரர் நீடூழி வாழ்க!" என்று வாழ்த்தினார்கள்.

இந்தக் கோஷங்களையும் கூச்சல்களையும் சுந்தர சோழர் அவ்வளவாக விரும்பவில்லை. எனினும் அதை வெளி

# செல்வன்



யில் காட்டிக் கொள்ளாமல், தமது நோயையும் மறந்து, வந்தவர்களை வரவேற்பதற்காக எழுந்திருக்க முயன்றார்.

உடனே, சின்னப் பழுவேட்டரையர் முன் வந்து, ''பிரபு! புலவர்கள் தங்களைத் தரிசித்து மரியாதை செலுத்திவிட்டுப் போக வந்திருக்கிறார்களேயன்றித் தங்களுக்குச் சிரமம் கொடுக்க வரவில்லை. ஆகையால் தயவு செய்து தங்களைச் சிரமப்படுத்திக் கொள்ளக் கூடாது!'' என்றார்.

''ஆம்! ஆம்! அரசர்க்கரசே! சக்கரவர்த்திப்பெருமானே! தங்களுக்குச் சிறிதும் சிரமம் கொடுக்க நாங்கள் வந்தோமில்லை!'' என்றார் புலவர்களின் தலைவராகிய நல்லன் சாத்தனார்.

''உங்களையெல்லாம் நெடுநாளைக்குப் பிறகு பார்ப்பதில் எனக்கு மிக்க மகிழ்ச்சி. அனைவரும் அமர வேண்டும். சில பாடல்கள் சொல்லிவிட்டுப் போக வேண்டும்!'' என்றார் தமிழன்பரான சக்கரவர்த்தி.

தரையில் விரித்திருந்த ரத்தின ஜமக்காளத்தில் எல்லோரும் உட்கார்ந்தார்கள். அதுதான் சமயமென்று நமது வீரன் வல்லவரையனும் புலவர் கூட்டத்துடன் கலந்து உட்கார்ந்து கொண்டான். தான் சொல்ல விரும்பியதை முழுதும் சக்கரவர்த்தியிடம் சொல்லாமல் போக அவனுக்கு மனம் இல்லை. சந்தர்ப்பம் ஒருவேளை மறுபடி கிடைத்தால் சொல்லிவிட்டுப் போகலாம் என்று எண்ணி உட்கார்ந்தான்.

இதைச் சின்னப் பழுவேட்டரையர் கவனித்தார். அவருடைய மீசை துடித்தது. முதலில் அவனை வெளியில் அனுப்பிவிடலாமா என்று நினைத்தார். பிறகு, அவன் அங்கே தம்முடைய கண்காணிப்பில் இருப்பதே நலம் என்று தீர்மானித்தார். எனவே, அவனைப் பார்த்தும் பார்க்காததுபோல்

அமரர் **கல்கி**

இருந்தார். இந்தப் புலவர்கள் சென்ற பிறகு அவனை வெளியே அழைத்துச் சென்று அவன் மகாராஜாவிடத்தில் சொன்ன செய்தி என்னவென்பதை நன்கு தெரிந்து கொள்ள விரும்பினார். "அபாயம்! அபாயம்!" என்ற அவனுடைய குரல் அவர் காதில் இன்னும் ஒலித்துக் கொண்டே இருந்தது.

"புலவர்களே! தமிழ்ப் பாடல்கள் கேட்டு அதிக காலமாயிற்று. என் செவிகள் தமிழ்ப் பாடலுக்குப் பசித்திருக்கின்றன. உங்களில் எவரேனும் புதிய பாடல் ஏதேனும் கொண்டு வந்திருக்கிறீர்களா?" என்று சக்கரவர்த்தி சுந்தர சோழர் கேட்டார்.

உடனே ஒரு புலவர் சிகாமணி எழுந்து நின்று, "பிரபு! உலகபுரத்தில் தங்கள் திருப்பெயரால் விளங்கும் சுந்தரசோழப்பெரும்பள்ளியிலிருந்து அடியேன் வந்தேன். சிவநேசச்செல்வராகிய தாங்கள் பௌத்த மடாலயத்துக்கு நிவந்தம் அளித்து உதவியதை இந்தத் தமிழகமெங்கும் உள்ள பௌத்தர்கள் பாராட்டிப் போற்றுகிறார்கள். தாங்கள் உடல் நோயுற்றிருப்பது அறிந்தது முதல் பிக்ஷுக்கள் மிக்க கவலை கொண்டு தங்கள் உடல் நலத்துக்காகப் பிரார்த்தனை நடத்தி வருகிறார்கள். அந்தப் பிரார்த்தனைப் பாடலை இவ்விடம் சொல்ல அருள்கூர்ந்து அனுமதி தர வேண்டும்!" என்றார்.

"அப்படியே சொல்ல வேணும்; கேட்கக் காத்துக் கொண்டிருக்கிறேன்" என்றார் சக்கரவர்த்தி.



புலவர் பின்வரும் பாடலை இசையுடன் பாடினார்:

**"போதியந் திருநிழல் புனித!நிற்**
**பரவுதும்**
**மேதகு நந்திபுரி * மன்னர் சுந்தரச்**
**சோழர் வண்மையும் வனப்பும்**
**திண்மையும் உலகிற் சிறந்துவாழ்**
**கெனவே!"**

பாடலைக் கேட்டதும் புலவர்கள் அத்தனை பேரும் "நன்று! நன்று!" என்று கூறித் தங்கள் பாராட்டுதலைத் தெரிவித்தார்கள்.

"புத்தர்கள் இவ்வளவு நன்றியுடையவர்களாயிருப்பது வியப்பு, வியப்பு!" என்றார் ஒரு வீர சைவக் கவிராயர்.

"ஆம்; அது வியப்பான காரியந்தான். உலகபுரம் புத்த மடத்துக்கு நான் செய்த சேவை மிக அற்பம். அதற்கு இவ்வளவு பாராட்டு வேண்டுமா?" என்றார் மன்னர்.

"சக்கரவர்த்தியின் வண்மைத் திறத்தை அனுபவித்தவர் யார்தான் என்றென்றைக்கும் நன்றி செலுத்திப் பாராட்டாதிருக்க முடியும்? - இந்திரனும் சூரியனும் சிவபெருமானும்கூடத் தங்களுடைய வண்மையின் பயனை அனுபவித்திருக்கிறார்கள்!" என்றார் மற்றோர் புலவர் சிரோமணி.

சுந்தர சோழர் முகத்தில் புன்னகை தவழ, "அது என்ன? இந்திரனும் சூரியனுமா? சிவபெருமான் கூடவா? அவர்கள் எதற்காக என்னிடம் நன்றி செலுத்த வேண்டுமாம்?" என்று கேட்டார்.

"ஒரு பாடல் சொல்ல அனுமதி தர வேண்டும்!" என்றார் அப்புலவர்.

"அப்படியே நடக்கட்டும்!" என்றார் மன்னர்.

புலவர் கையில் கொண்டு வந்திருந்த ஓலையைப் பிரித்துப் படிக்கலுற்றார்:—

---

* அந்நாளில் பழையாறை நகருக்கு நந்திபுரி என்னும் பெயரும் உண்டு. சில காலத்துக்கு முன்பு சோழ மண்டலம் பல்லவர் ஆட்சியின் கீழ் இருந்த போது நந்திபுரி என்னும் பெயர் பிரபலமாய் விளங்கியது. ஆகையினாலேயே இந்தப் பழம் பாடலில் நந்திபுரி மன்னர் என்று குறிப்பிட்டிருக்கிறது.

"இந்திரன் ஏறக் கரி அளித்தார், —
பரிஏ ழளித்தார்
செந்திரு மேனித் தினகரற்கு, —
சிவனுர் மணத்துப்
பைந்துகி லேறப் பல்லக்களித்தார், —
பழையாறை நகர்ச்
சுந்தரசோழரை யாவரொப்பார்கள் இத்
தொன்னிலத்தே!"

பாடலைப் புலவர் பாடி முடித்ததும் சபையிலிருந்த மற்றப் புலவர்கள் எல்லாரும் சிரக்கம்ப கரக்கம்பம் செய்தும், 'ஆஹாகாரம்' செய்தும், "நன்று! நன்று!" என்று கூறியும் தங்கள் குதூகலத்தை வெளியிட்டார்கள்.

சுந்தர சோழர் முகமலர்ச்சியுடன் "இந்தப் பாடலின் பொருள் இன்னதென்பதை யாராவது விளக்கிச் சொல்ல முடியுமா?" என்ருர்.

ஒரே சமயத்தில் பலர் எழுந்து நின்ருர்கள். பிறகு நல்லன் சாத்தனுரைத் தவிர, மற்றவர்கள் அனைவரும் உட்கார்ந்தார்கள். நல்லன் சாத்தனுர் பாடலுக்குப் பொருள் கூறினுர்:

"ஒரு சமயம் தேவேந்திரனுக்கும் விருத்திராசுரனுக்கும் போர் நடந்தது. அதில் இந்திரனுருடைய ஐராவதம் இறந்து போய் விட்டது. அதற்கு இணையான வேருெரு யானை எங்கே கிடைக்கும் என்று இந்திரன் பார்த்துக் கொண்டிருந்தான். கடைசியில் பழையாறை நகரில் வாழ்ந்த சுந்தரசோழசக்கரவர்த்தியிடம் அவன் வந்து 'ஐராவதத்துக்கு நிகரான ஒரு யானை வேண்டும்' என்று யாசித்தான். 'ஐராவதத்துக்கு நிகரான யானை என்னிடம் இல்லை. அதைவிடச் சிறந்த யானைகள் தான் இருக்கின்றன!' என்று இந்திரனைத் தமது யானைக் கொட்டாரத்துக்கு அழைத்துச் சென்ருர். அங்கே குன்றங்களைப் போல் நின்ற ஆயிரக்கணக்கான யானைகளைத் தேவேந்திரன் பார்த்துவிட்டு, 'எதைக் கேட்பது?' என்று தெரியாமல் திகைத்து நின்ருன். அவனுடைய திகைப்பைக் கண்ட சுந்தர சோழர் தாமே ஒரு யானையைப் பொறுக்கி இந்திரனுக்கு அளித்தார். 'அந்த யானையை எப்படி அடக்கி ஆளப் போகிருேம்? நம் வஜ்ராயுதத்தினுல் கூட முடியாதே!' என்ற பீதி இந்திரனுக்கு உண்டாகி விட்டதைக் கவனித்து, வஜ்ராயுதத்தை விட வலிமை வாய்ந்த ஓர் அங்குசத்தையும் அளித்தார்......

"பின்னர் ஒருகாலத்தில், செங்கதிர் பரப்பி உலகுக்கெல்லாம் ஒளிதரும் சூரிய பகவானுக்கும் ராகு என்னும் அரக்கனுக்கும் பெரும் போர் மூண்டது. ராகு தினகரனை விழுங்கப் பார்த்தான். முடியவில்லை! தினகரனுடைய ஒளி அவ்விதம் ராகுவைத் தகித்து விட்டது. ஆனுல் சூரியனுடைய தேரில் பூட்டிய குதிரைகள் ஏழும் ராகுவின் காலகோடி விஷத்தினுல் தாக்கப்பட்டு இறந்தன. சூரியன் தன் பிரயாணத்தை எப்படித் தொடங்குவது என்று திகைத்து நிற்கையில், அவனுடைய திக்கற்ற நிலையைக் கண்ட சுந்தர சோழர் ஏழு புதிய குதிரைகளுடன் சூரிய பகவானை அணுகி, 'ரதத்தில் இந்தக் குதிரைகளைப் பூட்டிக் கொண்டு சென்று உலகத்தை உய்விக்க வேண்டும்' என்று கேட்டுக் கொண்டார். தன் குலத்தில் வந்த ஒரு சோழ சக்கரவர்த்தி இவ்விதம் சமயத்தில் செய்த உதவியைச் சூரியனும் மிக மெச்சினுன்.

"பின்னர், சிவபெருமானுக்கும் பார்வதி தேவிக்கும் கைலையங்கிரியில் திருமணம் நடந்தது. பெண் வீட்டார் கலியாண சீர்வரிசைகளுடன் வந்திருந்தார்கள். ஆனுல் பல்லக்குக் கொண்டு வரத் தவறிவிட்டார்கள். ஊர்வலம் நடத்துவதற்கு எருது மாட்டைத் தவிர வேறு வாகனம் இல்லையே என்று கவலையுடன் பேசிக் கொண்டார்கள். இதை அறிந்த சுந்தர சோழ சக்கரவர்த்தி உடனே பழையாறை அரண்மனையிலிருந்து தமது முத்துப் பல்லக்கைக் கொண்டுவரச் சொன்னுர். பயபக்தியுடன் சிவபெருமான் திருமணத்துக்குத் தம் காணிக்கையாக அப்பல்லக்கை அளித்தார். அப்படிப்பட்ட சுந்தர சோழ சக்கரவர்த்திக்கு உவமை சொல்லக் கூடியவர்கள் இந்த விரிந்து பரந்த அலை கடல் சூழ்ந்த பெரிய உலகத்தில் வேறு யார் இருக்கிருர்கள்?......"

இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த சுந்தர சோழ சக்கரவர்த்தி 'கலீர்' என்று சிரித்தார். நோயின்



வேதனையினால் நெடு நாள் சிரித்தறியாத சக்கரவர்த்தியின் சிரிப்பு அவருடைய இணைபிரியாப் பத்தினியான மலையமான் மகள் வானவன் மாதேவிக்கும் தாதியர்களுக்கும் அரண்மனை வைத்தியருக்கும் கூடச் சிறிது உற்சாகத்தை அளித்தது..

கோட்டைத் தளபதி சின்னப் பழுவேட்டரையர் இத்தனை நேரமும் நின்று கொண்டேயிருந்தவர், சக்கரவர்த்தியைக் கைகூப்பிவணங்கி, "பிரபு! நான் பெரிய தவறு செய்து விட்டேன்; பிழை பொறுத்து மன்னிக்கவேண்டும்!" என்றார்.

"ஆ! தளபதியா பேசுகிறது? நீர் என்ன பிழை செய்தீர்? எதற்காக மன்னிப்பு? ஒரு வேளை இந்திரனுக்கு நான் அளித்த வெள்ளை யானையையும் சூரியனுக்கு அளித்த குதிரைகளையும் திரும்பப் பறித்துக் கொண்டு வந்து விட்டீரோ? சிவபெருமானிடமிருந்துசிவிகையையும் பிடுங்கிக் கொண்டு வந்து விட்டீரோ? செய்யக் கூடியவர் தான் நீர்!" என்று சுந்தரசோழர் சொல்லி மீண்டும் சிரித்ததும், சக்கரவர்த்தியுடன் சேர்ந்து புலவர்களும்




அரண்மனை மருத்துவர் சொற்படி செய்தேன். ஆனால் இப்போது அது பிழை என்று உணர்கிறேன். இந்தப் புலவர்களின் வரவினால் தங்கள் முகம் மலர்ந்தது. இவர்களுடைய பேச்சைக் கேட்டுத் தாங்கள் வாய்விட்டுச் சிரித்தீர்கள். அந்தக்குதூகலச் சிரிப்பின் ஒலியைக் கேட்டு உடையபிராட்டியின் *முகமும்தாதியரின் முகங்களும் மலர்ந்தன. நானும் மகிழ்ந்தேன். இவ்வளவு குதூகலம் தங்களுக்கு அளிக்கக் கூடியவர்களை இத்தனை நாள் தங்கள் சந்நிதானத்துக்கு வரவொட்டாமல் தடுத்தது என்னுடைய பெரும் பிழை தானே?......'' என்றார்.

''நன்று சொன்னீர், தளபதி! இப்போதாவது இதை நீர் உணர்ந்தீர், அல்லவா! 'வைத்தியர் சொல்லுவதைக் கேட்கவேண்டாம்; புலவர்கள் வருவதைத் தடுக்க வேண்டாம்' என்று உமக்கு நான் அடிக்கடி சொன்னதின் காரணம் தெரிகிறது அல்லவா?'' என்றார் சக்கரவர்த்தி.

அரண்மனை வைத்தியர் எழுந்து கைகட்டி வாய் புதைத்து ஏதோ சொல்லத் தொடங்கினார். அதைச் சுந்தர சோழர் சட்டை செய்யாமல் புலவர்களைப் பார்த்து, ''இந்த அருமையான பாடலைப் பாடிய புலவர் யார் என்று உங்களில் யாருக்காவது தெரியுமா? தெரிந்தால் சொல்ல வேணும்!'' என்றார்.

நல்லன் சாத்தனார், ''அரசர்க்கரசே! அதுதான் தெரியவில்லை! நாங்

சிரித்தார்கள். எல்லாரையும் காட்டிலும் அதிகமாக வந்தியத்தேவன் சிரித்தான். அதைச் சின்னப் பழுவேட்டரையர் கவனித்து அவனை நோக்கிக் கடுமையாக ஒரு பார்வை பார்த்தார்: உடனே, சக்கரவர்த்தியின் பக்கம் திரும்பிப் பார்த்துக் கூறினார்:—

''அரசர்க்கரசே! நான் செய்த பிழை இதுதான். இத்தனை காலமும் நான் இவர்களைப் போன்ற புலவர் சிகாமணிகளைத் தங்களிடம் வரவொட்டாமல் தடை செய்து வைத்திருந்தேன்.

---

* பட்டத்து அரசியை 'உடைய பிராட்டி' என்று குறிப்பிடுவது அக்காலத்து மரபு.

களும் அதைக் கண்டுபிடிக்க முயன்று கொண்டுதானிருக்கிறோம். கண்டு பிடித்து அந்த மாபெரும் புலவருக்குக் 'கவிச்சக்கரவர்த்தி' என்று பட்டம் சூட்டவும் சிவிகையில் ஏற்றி அவரை நாங்கள் சுமந்து செல்லவும் சித்தமாயிருக்கிறோம். இதுகாறும் எங்கள் முயற்சி பலன் அளிக்கவில்லை!'' என்று சொன்னார்.

''அதில்வியப்பு ஒன்றுமில்லை. நாலு வரி கொண்ட பாடலில் இவ்வளவு பெரும் பொய்களை அடக்கக் கூடிய மகா கவிஞர் தமது பெயரை வெளிப் படுத்திக் கொண்டு முன் வர விரும்ப மாட்டார்தானே?'' என்று மகாராஜா கூறியதும், புலவர்களின் திருமுகங்களைப் பார்க்க வேண்டுமே! ஒருவர் முகத்திலாவது ஈ ஆடவில்லை. என்ன மறுமொழி சொல்லுவது என்றும் அவர்களுக்குத் தெரியவில்லை.





இந்த நிலைமையில் நமது வந்தியத்தேவன் துணிச்சலாக எழுந்து, ''பிரபு! அப்படி ஒரே அடியாகப் பொய் என்று தள்ளிவிடக் கூடாது. இல்லாத விஷயத்தைச் சாதாரணப் பாமர மக்கள் சொன்னால் அது பொய்; இராஜாங்க நிர்வாகத்தில் ஈடுபட்டவர்கள் அவ்விதம் சொன்னால், அது இராஜதந்திர சாணக்கியம்; கவிகள் அவ்வாறு கூறினால் அது கற்பனை; அணி அலங்காரம், இல்பொருள் உவமை......'' என்றான்.

புலவர்கள் அத்தனை பேரும் அவன் பக்கமாகப் பார்த்து, ''நன்று! நன்று!'' என்று உற்சாகத்துடன் ஆர்ப்பரித்தார்கள்.

சக்கரவர்த்தியும் வந்தியத்தேவனை உற்று நோக்கி, ''ஓ! நீ காஞ்சியிலிருந்து ஓலை கொண்டு வந்தவன் அல்லவா? கெட்டிக்காரப் பிள்ளை! நன்றாக என்னை மடக்கிவிட்டாய்!'' என்றார். பிறகு சபையைப் பார்த்து, ''புலவர்களே! பாடல் மிக அருமையான பாடலாக இருந்தாலும், அதைப் பாடியவரைக் கண்டுபிடிக்க வேண்டிய சிரமமும், அவருக்குக் கவிச் சக்கரவர்த்தி என்னும் பட்டம் சூட்ட வேண்டிய அவசியமும் இல்லை. இதைப் பாடிய புலவரை எனக்குத் தெரியும். ஏற்கெனவே அவருடைய சிரஸின் பேரில் தூக்க முடியாத கனமுடைய சோழ சாம்ராஜ்ய மணிமகுடம் உட்கார்ந்து அழுத்திக் கொண்டிருக்கிறது. 'புவிச் சக்கரவர்த்தி' 'திரிபுவனச் சக்கரவர்த்தி' 'ஏழுலகச் சக்கரவர்த்தி' என்னும் பட்டங்களையும் அந்தக் கவிராயர் சுமக்க முடியாமல் சுமந்து கொண்டிருக்கிறார்!'' என்றார் சுந்தர சோழர்.

மணியம்



இதைக் கேட்ட புலவர்கள் அத்தனை பேரும் ஆச்சரியக் கடலில் முழுகித் தத்தளித்தார்கள் என்று கூறினால், அதை வாசகர்கள் பொய் என்று தள்ளிவிடக் கூடாது! ஆசிரியரின் கற்பனை, அணி அலங்காரம், இல்பொருள் உவமை, — என்று இவ்விதம் ஏதாவது ஒரு வகை இலக்கணம் கூறி ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்!

# அத்தியாயம் 28

# இரும்புப் பிடி



டீரென்று பொங்கிய புதுவெள்ளம்போன்ற ஆச்சரியத்தின் வேகம் சிறிது குறைந்ததும், புலவர் தலைவரான நல்லன் சாத்தனார், ''பிரபு! அப்படியானால், இந்தப் பாடலை இயற்றிய கவி......'' என்று தயங்கினார்.

''உங்கள் முன்னால், கால்களின் சுவாதீனத்தை இழந்து, நோய்ப் படுக்கையில் படுத்திருக்கும் புவிச் சக்கரவர்த்திதான்!'' என்றார் சுந்தர சோழர்.

புலவர்களிடையே பலவித வியப்பொலிகளும், 'ஆஹா கார'மும் எழுந்தன. சிலர் தங்களுடைய மனோநிலையை எவ்விதம் வெளியிடுவது என்று தெரியாமல் தலையையும் உடம்பையும் அசைத்துக் கொண்டிருந்தார்கள். இன்னும் சிலர் தங்களுடைய மனோநிலை இன்னதென்று தங்களுக்கே தெரியாமல் கல்லாய்ச் சமைந்திருந்தார்கள்!

சுந்தர சோழர் கூறினார்: — ''புலவர் பெருமக்களே! ஒரு சமயம் பழையாறையில் புலவர்களும் கவிஞர்களும் என்னைப் பார்க்க வந்தார்கள். அந்தக் கூட்டத்தில் உங்களில் சிலரும் இருந்திருக்கலாம். ஒவ்வொருவரும் சோழ குலத்தின் வள்ளல் தன்மையைக் குறித்து ஒவ்வொரு பாடல் சொன்னார்கள். என்னைப் பற்றியும் பாடினார்கள். நான் 'இவருக்கு அதைக் கொடுத்தேன், அவருக்கு இதை அளித்தேன்' என்றெல்லாம் பாடினார்கள். அச்சமயம் இளையபிராட்டி குந்தவையும் என் அருகில் இருந்தாள். புலவர்கள் பரிசில்கள் பெற்றுச் சென்ற பிறகு அவர்கள் பாடிய பாடல்களை அரசிளங்குமரி புகழ்ந்து பாராட்டினாள். குந்தவையிடம் நான் 'புலவர்களையெல்லாம்விட என்னால் நன்றாகப் பாட முடியும்' என்று சபதம் கூறினேன். பிறகுதான் வேடிக்கையாக இந்தப் பாடலைப் பாடினேன். 'எனக்குப் பரிசு கொடு!' என்று கேட்டேன். குழந்தை என் முதுகின்மேல் ஏறி உட்கார்ந்து கொண்டு 'இந்தாருங்கள் பரிசு!' என்று கன்னத்துக்கு இரண்டு அறை கொடுத்தாள்! அது நேற்று நடந்தது போல் எனக்கு ஞாபகம் இருக்கிறது. ஆனால் ஆண்டு எட்டுக்கு மேல் ஆகிறது!......'' என்றார்.

''விந்தை! விந்தை!'' என்றும், ''அற்புதம்! அற்புதம்!'' என்றும் புலவர்கள் கூறி மகிழ்ந்தார்கள்.

குந்தவை என்ற பெயரைக் கேட்டதுமே வந்தியத்தேவனுக்கு மெய் சிலிர்த்தது. சோழ குலத்தில் பிறந்த அந்த இணையில்லாப் பெண்ணரசியின் எழிலையும்புலமையையும்அறிவுத் திறனையும் பற்றி அவன் எவ்வளவோ கேள்விப்பட்டதுண்டு. அத்தகைய அதிசய அரசகுமாரியைப் பெற்றெடுத்த பாக்கியசாலியான தந்தை இவர்; தாய் அதோ பக்கத்தில் அமர்ந்திருக்கும் மூதாட்டி. சுந்தர சோழர் தம் செல்வப் புதல்வியைக் குறித்துப் பேசும் போது எவ்வளவு பெருமிதத்துடன் பேசுகிறார்? அவர் குரல் எப்படித் தழுதழுத்து உருக்கம் பெறுகிறது?......

வந்தியத்தேவனுடைய வலக்கரம் அவனுடைய இடையைச் சுற்றிக் கட்டியிருந்த பட்டுத்துணிச் சுருளைத் தடவிப் பார்த்தது. ஏனெனில் குந்தவைப் பிராட்டிக்கு அவன் கொண்டு வந்திருந்த ஓலை அச்சுருளுக்குள் இருந்தது. தடவிப் பார்த்த கை திகைப்படைந்து செயலிழந்து நின்றது; அவனுடைய உள்ளம் திக்பிரமை கொண்டது. ஐயோ! இது என்ன? ஓலையைக் காணோமே? எங்கே போயிற்று? எங்கேயாவது விழுந்து விட்டதோ? சக்கரவர்த்தியின் ஓலையை எடுத்த போது அதுவும் தவறி விழுந்திருக்குமோ? எங்கே விழுந்திருக்கும்? ஒருவேளை ஆஸ்தான மண்டபத்தில்



விழுந்திருக்குமோ? அப்படியானால் சின்னப் பழுவேட்டரையரின் கையில் சிக்கிவிடுமோ? சிக்கி விட்டால் அதிலிருந்து ஏதேனும் அபாயம் முளைக்குமோ? அடடா? என்ன பிசகு! எத்தனை பெரிய தவறுதல்! இதிலிருந்து எப்படிச் சமாளிப்பது.....?

குந்தவை தேவிக்குக் கொணர்ந்த ஓலை தவறிவிட்டது என்று அறிந்த பிறகு வந்தியத் தேவனுக்கு அங்கு இருப்புக் கொள்ளவில்லை. மேலே நடந்த பேச்சு வார்த்தைகளும் அவன் காதில் சரியாக விழவில்லை; விழுந்ததும் மனத்தில் நன்கு பதியவில்லை.

சுந்தர சோழர் வியப்புக் கடலில் மூழ்கியிருந்த புலவர் கூட்டத்தைப் பார்த்து மேலும் கூறினார்:—

"நான் விளையாட்டாகச் செய்த பாடலைக் குந்தவை யாரிடமாவது சொல்லியிருக்க வேண்டும். ஒருவேளை பழையாறை திருமேற்றளி ஆலயத்தின் ஈசான்ய பட்டாச்சாரியாரிடம் சொல்லியிருக்கலாம். அவர் இப்பாடலை நாடெங்கும் பரவும்படி செய்து என்னை உலகம் பரிகசிப்பதற்கு வழி செய்துவிட்டார்....!"

"பிரபு! தாங்களே பாடியிருந்தால் என்ன? பாட்டல் அற்புதமான பாடல்தான்! சந்தேகமேயில்லை. தாங்கள் 'புவிச் சக்கரவர்த்தி'யாயிருப்பதோடு, 'கவிச் சக்கரவர்த்தி'யும் ஆவீர்கள்!" என்றார் நல்லன் சாத்தனார்.

"ஆயினும், இச்சமயம் அதே பாடலை நான் பாடியிருந்தால் இன்னொரு கொடையையும் சேர்த்திருப்பேன். இந்திரனுக்கு யானையும், சூரியனுக்குக் குதிரையும், சிவனாருக்குப் பல்லக்கும் கொடுத்ததோடு நிறுத்தியிருக்கமாட்டேன். மார்க்கண்டனுக்காக மறலியைச் சிவபெருமான் உதைத்தார் அல்லவா? அந்த உதைக்கு யமன் தப்பித்துக் கொண்டான். ஆனால் அவனுடைய எருமைக் கடா வாகனம் சிவபெருமான் கோபத்தைத் தாங்காமல் அங்கேயே விழுந்து செத்துவிட்டது. வாகனமில்லாமல் யமன் திண்டாடிக்கொண்டிருந்ததையறிந்து பழையாறைச் சுந்தர சோழர் யமனுக்கு

எருமைக் கடா வாகனம் ஒன்றை அனுப்பினர்....! இப்படி ஒரு கற்பனை யும் சேர்த்திருப்பேன். அந்த எருமைக் கடாவின் பேரில் ஏறிக் கொண்டு தான் யமன் இப்போது ஜாம் ஜாம் என்று என்னைத் தேடி வந்து கொண் டிருக்கிறன். நமது தஞ்சைக் கோட்டைத் தளபதி சின்ன பழுவேட் டரையரால்கூட யமதர்ம ராஜனையும் அவனுடைய எருமைக் கடா வாகனத் தையும் தடுத்து நிறுத்திவிட முடியாது அல்லவா?''

இப்படிச் சுந்தர சோழர் சொன்ன போது அவர் அருகில் வீற்றிருந்த உடைய பிராட்டி வானவன்மா தேவி யின் கண்களில் நீர் அருவி பெருகிற்று. அங்கிருந்த புலவர்களில் பலர் விம்மி அழத் தொடங்கிவிட்டார்கள்.

சின்னப் பழுவேட்டரையர் மட்டுமே மனோதிடத்துடன் இருந்தார்.

''பிரபு! தங்களுடைய சேவையில் யமனுடன் போர் தொடுக்கவும் நான் சித்தமாயிருப்பேன்!'' என்றார்.

''அதற்கு ஐயமில்லை, தளபதி! ஆயினும் யமனுடன் போர் தொடுக் கும் சக்தி மானிடர் யாருக்கும் இல்லை. யமனைக் கண்டு அஞ்சாமலிருக்கத் தான் நாம் இறைவனைப் பிரார்த்திக்க வேண்டும். புலவர்களே! 'நமனை அஞ் சோம்' என்று தமிழகத்தின் தவப் புதல்வர் ஒருவர் பாடினார் அல்லவா?'' என்றார் சக்கரவர்த்தி.

ஒரு புலவர் எழுந்து அப்பாடலைப் பாடினார்:—

**''நாமார்க்கும் குடியல்லோம்**
**நமனை அஞ்சோம்**
**நரகத்தில் இடர்ப்படோம்**
**நடலை யல்லோம்**
**ஏமாப்போம் பிணியறியோம்....''**

சக்கரவர்த்தி இந்த இடத்தில் குறுக் கிட்டு, ''ஆகா! இறைவனைப் பிரத்யட்ச மாகத் தரிசித்த மகானைத் தவிர வேறு யாரால் இவ்வளவு துணிச்சலாகப் பாட முடியும்? அப்பர் சுவாமிகளுக் குக் கொடிய சூலை நோய் இருந்தது. இறைவன் அருளால் நோய் நீங் கிற்று. எனவே, 'பிணியறியோம்' என்று பாடியிருக்கிறார்! புலவர்களே! என்னைப் பற்றியும் என் கொடை களைப் பற்றியும் பாடுவதை நிறுத்தி விட்டு இனி இத்தகைய அருள் வாக் கைப் பாடுங்கள்! அப்பரும், சம்பந்த ரும், சுந்தர மூர்த்தியும் இதுபோல் ஆயிரக்கணக்கான பக்திமயமான தீந் தமிழ்ப் பாடல்களைப் பாடியிருக்கிறார் கள். அப்பாடல்கள் எல்லாவற்றையும் ஒருங்கு சேர்த்தால் எவ்வளவு நன்றா யிருக்கும்? படித்தும் பாடியும் பரவசம் அடைவதற்கு ஓர் ஆயுட்காலம் போதாது அல்லவா?'' என்றார்.

''அரசர்க்கரசே! தாங்கள் அநு மதித்தால் அந்தத் திருப்பணியை இப் போதே தொடங்குகிறோம்!''

''இல்லை; என்னுடைய காலத்தில் நடக்கக் கூடிய திருப்பணி அல்ல அது. எனக்குப் பின்னால்....'' இவ்விதம் கூறித் தயங்கி நின்ற சுந்தர சோழர் சிந்தனையில் ஆழ்ந்தார்.

அரண்மனை மருத்துவர், சின்னப் பழுவேட்டரையரின் அருகில் வந்து அவர் காதில் ஏதோ சொன்னார்.

அதைக் கவனித்த சுந்தர சோழர் தூக்கி வாரிப் போட்டவரைப் போல் கண்ணை நன்கு விழித்துச் சபையோ ரைப் பார்த்தார். வேறொரு உலகத்தி லிருந்து, மரணத்தின் வாசலிலிருந்து, யமனுலகக் காட்சியிலிருந்து, திடீ ரென்று திரும்பி வந்தவரைப் போல் சக்கரவர்த்தி தோன்றினார்.

''பிரபு! சங்கப் பாடல் ஒன்றைக் கேட்க வேண்டும் என்று தங்கள் விருப் பத்தைத் தெரிவித்தீர்கள். அதை மட்டும் சொல்லிவிட்டு இவர்கள் போகலாமல்லவா?'' என்றார் சின்னப் பழுவேட்டரையர்.

''ஆம், ஆம்; மறந்துவிட்டேன். என்னுடைய உடல் மட்டும் அல்ல; உள்ளமும் சுவாதீனத்தை இழந்து வரு கிறது. எங்கே? சங்கப் பாடலைச் சொல்லட்டும்!'' என்றார் மன்னர்.



ன்னப் பழுவேட்டரை யர் நல்லன் சாத்தனா ருக்குச் சமிக்ஞை செய் தார். புலவர் தலைவர் எழுந்து கூறினார்:—

''அரசே! தங்களு டைய முன்னோர்களில் மிகப் பிரபல மானவர் கரிகால் பெருவளத்தார்.

**GANESHJI MANDIR**
IRWIN ROAD, NEW DELHI-1

*An appeal to YOU*

**Sani Preethi to ward off the bad effects of Sani Bhagwan**

Our human life is controlled by the Navagrahas and Sani plays an important role in everyone's life. Therefore, for the smooth running of our daily life, His kindness is very necessary. It has been the belief from time immemorial that Sani Bhagwan is very much pleased with the offering of til oil to the glowing lamp kept before Him, and in turn He minimises our sufferings to a great extent. Who would not like to see that his sufferings are put to an end? In order to see that this lamp glows continuously and your share of til oil is also added every day in your own interest and benefit, we are already on the move to deposit two lakhs of rupees by collecting Rs. 200/- each from 1000 devotees so that out of the interest thereof, it is made possible to keep the lamp glowing. Thus your contribution of Rs. 200/- (that too only once in your life time) is for an eternal cause and your share of til oil is added every day throughout the entire future. We are quite confident that you would like to be associated with such a noble cause by forwarding your cheque drawn in favour of 'GANESHJI MANDIR' to:-

PAROPAKA MANI S.R. IYER
SECRETARY




பல ஆண்டுகளாக புகழ்பெற்றது

# மான் மார்க் அப்பளம்

TRADE MARK NO : 369932

# STAG BRAND APPALAM

போலியான மான் மார்க் அப்பளங்களைக் கண்டு ஏமாறாமலிருக்க

**E.K. Balakrishnan & Co.,**
1 Jayaram Nagar, (Near Ambattur I.C.F. Colony)
AYAPPAKKAM, MADRAS-600 077

என்ற விலாசத்தை கவனித்து வாங்கவும்

குறிப்பு:- வியாபார விசாரணைகள் வரவேற்கப்படுகின்றன.
வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதற்கான ஆர்டர் ஏற்றுக்கொள்ளப்படும்.

# விஸ்ட்ரம்

ஒரு டயபடிக் உணவு







TAS

நீரிழிவுக்காரர்களுக்கென்றே பிரத்யோகமாக வடிவமைக்கப்பட்டது.

சோர்வை நீக்கி, சக்தியை கொடுத்து தெம்பை ஊட்டுகின்றது

கொழுப்புச் சத்து சிறிதும் இல்லாதது

முழுவதும் தானிய, பருப்பு வகைகளால் ஆனது

செயற்கை வண்ணமோ, மணமோ, ருசியோ சேர்க்கப்படாதது இயற்கை தந்த பாதுகாப்புடன் அளிக்கப்படுகிறது

ஸ்பென்ஸர்ஸ், சிந்தாமணி, நீல்கிரீஸ் மற்றும் எல்லா மருந்துக் கடைகளிலும், டிபார்ட்மெண்டல் கடைகளிலும் கிடைக்கும்.

இமய மலையில் புலிக் கொடியைப் பொறித்த மாவீரர். அவருடைய ஆட்சி காலத்தில் பூம்புகார் — காவேரிப்பட்டினம் — சோழ மகா ராஜ்யத்தின் தலைநகரமாயிருந்தது. பற்பல வெளி நாடுகளிலிருந்தும், பற்பல பொருள்கள் மரக்கலங்களில் வந்து இறங்கிய வண்ணமிருந்தன. பூம்புகாரின் செல்வப் பெருக்கையும் வளத்தையும் வர்ணிக்கும் சங்கப் புலவர் ஒருவர் இன்னின்ன நாட்டிலிருந்து இன்னின்ன பொருள்கள் வந்தன என்பதைத் தெளிவாகச் சொல்லியிருக்கிறார். அந்தப் பாடல் பகுதி இது: —

**வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்**
**குடமலைப் பிறந்த வாரமும் அகிலும்**
**தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்**
**கங்கை வாரியும் காவிரிப் பயனும்**
**ஈழத்து உணவும் காழகத் தாக்கமும்..."**

பாடலில் இந்த இடம் வந்தபோது சுந்தர சோழர் கையினால் சமிக்ஞை செய்யவே, புலவர் நிறுத்தினார்.

"தளபதி! கரிகால் வளவர் காலத்தில் ஈழநாட்டிலிருந்து தமிழகத்துக்கு உணவுப் பொருள் வந்து கொண்டிருந்தது என்று இப்பாடல் சொல்கிறது. அதை நான் அறிவதற்காகத் தானே இப்புலவர்களை அழைத்து வந்தீர்?"

"ஆம், அரசே!" என்று கோட்டைத் தளபதி கூறியது சிறிது ஈனஸ்வரத்தில் கேட்டது.

"அறிந்து கொண்டேன். இனி இப் புலவர்களைப் பரிசில்கள் கொடுத்து அனுப்பிவிடலாம்!" என்றார் மன்னர்.

"புலவர்களே! நீங்கள் இப்போது விடை பெற்றுக் கொள்ளலாம்!" என்றார் கோட்டைத் தளபதி.

புலவர்கள் மன்னருக்கு "வாழி!" கூறிக் கோஷித்துக் கொண்டு புறப்பட்டுச் சென்றார்கள்.

குந்தவை தேவிக்குக் கொண்டு வந்த ஓலையைக் காணாததால் மனக் கலக்கம் அடைந்திருந்த வல்லவரையன், அப்புலவர்களுடனே தானும் நழுவி விடலாம் என்று எண்ணி எழுந்து கூட்டத்தின் நடுவில் நடந்து சென்றான்.

ஆனால், அவன் எண்ணம் நிறைவேறவில்லை. வாசற்படியை நெருங்கியபோது ஒரு வலிய இரும்புக் கை அவனுடைய கையின் மணிக்கட்டை இறுகப் பிடித்தது. வல்லவரையன் நல்ல பலசாலிதான்! ஆயினும் அந்த வஜ்ரப் பிடியின் வேகம் அவன் உச்சந் தலை முதல் உள்ளங்கால் வரையில் ஒரு குலுக்குக் குலுக்கி அவனைச் செயலிழந்து நிற்கும்படி செய்துவிட்டது.

அவ்விதம் பிடித்த இரும்புக் கரம் சின்னப் பழுவேட்டரையரின் கரந்தான் என்பதை நிமிர்ந்து பார்த்துத் தெரிந்து கொண்டான்.

புலவர்கள் தரிசன மண்டபத்திலிருந்து வெளியேறினார்கள்.

(தொடரும்)

## புதுவாழ்வு அளித்த கனவு....!

மெக்சிமன்கோ என்ற ரஷ்ய வீரர் இரண்டாவது உலகப் போரின்போது, ஹிட்லர் படையை எதிர்த்துப் போராடினார். யுத்த களத்தில் சண்டையிட்டுக் கொண்டிருக்கும்போது அதிர்ச்சியில் திடீரென ஊமையானார்; காதும் செவிடாயிற்று. என்ன சிகிச்சை செய்தும் பலனில்லை.

இவ்வளவு வருடங்கள் கழிந்து சமீபத்தில் இவர் தூங்கிக் கொண்டிருந்தபோது, யுத்த களத்தில் முன்னணியில் நின்று சண்டையிடுவதுபோல் கனவு கண்டார். ஹிட்லர் படை இவரை நெருங்குவதாகவும், ஆனால் இவரிடம் ஆயுதம் எதுவுமில்லாமல், நிராயுதபாணியாய் நிற்பதாகவும் கனவு கண்ட போது ஏற்பட்ட அதிர்ச்சியில் வாய் திறந்து கத்தினார்....

திடுக்கிட்டு விழித்த அவருக்கு உண்மையிலேயே பேசும் சக்தி மீண்டுவிட்டது! காதும் கேட்க ஆரம்பித்துவிட்டது.

ஆதாரம்: டைம்ஸ் ஆஃப் இந்தியா

தகவல்: இரா. கிருத்திகா.



# பொன்மொழிப் போட்டி-3 முடிவு

**சரியான விடை:**

1. நம்பிக்கை—பொழுது விடியும் முன்பே இருட்டில் கூவும் பறவை போன்றது.

— தாகூர்

2. செய்திகளைத் தருவது மட்டும் நாளிதழ்களின் பணியல்ல. மக்களை உசுப்பிவிட்டு, 'நாம் ஏதேனும் செய்தாக வேண்டும்' என்ற எண்ணத்தைத் தோற்றுவிக்க வேண்டும்.

— மார்க்டுவெய்ன்

3. நான் என்ற மமதை மிக்க ஆங்கிலச் சொல் I. அதனை அடிப்பது போல் குறுக்குக் கோடு போட்டால் சிலுவைக் குறியாகிவிடும். மமதையை அடித்து விரட்டினால் கடவுள் தன்மை அடையலாம். — சத்யசாயி பாபா

4. ஒட்டுப் போடாத நல்ல குடி மக்களால் மோசமான அரசியல்வாதிகள் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். — குஷ்வந்த் சிங்

*சரியான விடையைப் பின்வரும் வாசகர்கள் எழுதி, ரூ. 200 பரிசைச் சமமாகப் பகிர்ந்து கொள்கிறார்கள்:*

1. எஸ். சுகவனம், சேலம் — 4. 2. கே. கிருஷ்ணன், காரைக்குடி. 3. அ. சரவணன், தஞ்சை — 2. 4. வே. பாலன், பள்ளியடா (நீலகிரி). 5. எஸ். சத்யாதேவி, பெருந்துறை. 6. எம். சம்பத், வேலாயுதம்பாளையம். 7. ஹில்டா ராணி, வேலூர் (வ. ஆ.) 8. எஸ். ஸ்ரீவித்யா, களஞ்சியம். 9. டி. குணசேகர், சென்னை — 50. 10. என். மீனு, கடலூர் — 2. 11. திருமதி தேவகி தயாள், மதுரை — 10. 12. எஸ். ராமஸ்வாமி, மகாதேவபுரம் (64 1305). 13. ஜி. எம். ஜனார்த்தனன், மதுரை — 9. ஏ. கோதண்டபாணி, கடலூர் — 2. 14. கே. ரெங்கநாயகி, காட்டுப்புத்தூர். 15. ஜி. ராஜேந்திரன், கடலூர் — 2. 16. ஏ. மோகனவல்லி, செங்குந்தபுரம் (பெரியார்). 17. எஸ். சங்கரன், சங்கரன் கோவில். 18. ஏ. பி. முத்துராஜா, சி. என். பாளையம் (607 102). 19. கே. எஸ். ராதாகிருஷ்ணன், கோபிச்செட்டிபாளையம். 20. க. காயத்ரிதேவி, தருமபுரி — 1. 21. காக. க. வேலாயுதன், ஒண்டிப்புதூர் (கோவை). 22. கு. சந்துருக்கன், ராஜபாளையம். 23. கே. ஆர். ரமேஷ் பாபு, மதுரை — 1. 24. எம். ராஜா, மதுரை — 4. 25. கே. எஸ். பரமேசுவரன், சென்னை — 41. 26. திருமதி கமலா, ஸ்ரீரங்கம். 27. எம். விஜயகுமார், செஞ்சி குணம் (605 755). 28. ஆர். விஜயபாஸ்கர், ஆற்காடு. 29. பி. விஜயலட்சுமி, சென்னை — 13. 30. எஸ். உமா மகேஸ்வரி, சேலம் — 1. 31. டி. வேளாங்கண்ணி, தருமத்துப்பட்டி (அண்ணா). 32. டி. கே. பார்த்தசாரதி, மேட்டூர் அணை. 33. எஸ். சி. கிருஷ்ணமூர்த்தி, சத்துவாச்சாரி (வ. ஆ.) 34. எம். ராகவேந்திர ராவ், கோவை — 29. 35. லலிதா விஸ்வநாதன், பம்பாய் — 25. 36. எஸ். லலிதா, கோவை — 1. 37. கே. பத்மா, சென்னை — 28. 38. எஸ். அருள்சாமி, கணபதிபுரம், (கன்னியாகுமரி). 39. கே. கனகராஜ், வக்ரோ. 40. இ. பரிமளம், இராமவர்மபுரம் (நெல்லை). 41. மு. நிரஞ்சனா, அருப்புக்கோட்டை (காமராஜர்). 42. பி. ராமநாராயணன், ஈரோடு — 2. 43. வி. பிரியா, சென்னை — 61. 44. ஏ. மகேஷ், சென்னை — 73. 45. ஆர். ராமமூர்த்தி, செகந்தராபாத். 46. சி. பானுமதி, சிவகாசி. 47. பி. ராமமூர்த்தி, சென்னை — 44. 48. எம். ஜோசப், பாரூச் (392 001). 49. எஸ். மணிவண்ணன், சென்னை — 23. 50. கே. வெங்கடாசலம், திருச்சி — 13. 51. மீனாட்சி சாம்பமூர்த்தி, சேலம் — 16. 52. வி. சுவாமிநாதன், குத்தாலம் (தஞ்சை) 53. எம். விஜயகுமார், பொள்ளாச்சி. 54. என். தேவிகுமாரி, ஈரோடு — 9. 55. ஹெச். சாயி கணேசன், சென்னை — 28. 56. வி. நாகராஜன், நெய்வேலி — 2. 57. ச. சந்திரசேகர், திருச்சி — 20. 58. ஏ. குணவதி, திருப்பூர் — 7. 59. பி. கருணாநிதி, சென்னை — 19. 60. ஜி. முத்துக்கிருஷ்ணன், சென்னை — 10. 61. கே. கே. பச்சையப்பன், கூகலூர் (பெரியார்) 62. ஆர். கண்ணன், கோவை — 14. 63. ஜெ. அம்பிகா, சென்னை — 74. 64. கே. வி. பட்டாபிராமன், சென்னை — 88. 65. ஜெ. டி. இசைமொழி, நெல்லிக்குப்பம் (தெ. ஆ.) 66. தங்க பாண்டியன், புதுக்கோட்டை. 67. டி. சரவணன், சென்னை — 49. 68. திருமதி சரோஜினி ஸ்ரீனிவாசன், பெங்களூர் — 10. 69. மரகதம், சேலம் — 2. 70. சி. ராமகிருஷ்ணன், பெங்களூர் — 12. 71. எஸ். பாலா, திருவாரூர். 72. பி. அருள்மணி, பெங்களூர் — 50. 73. ஏ. வரதராசன், சென்னை — 88. 74. திருமதி வேணி ராமநாதன், சென்னை — 28. 75. திருமதி சுதாஹரன், தும்கூர் (கர்நாடகா). 76. ஆர். எஸ். ராகவன், புதுக்கோட்டை. 77. வி. விஜயகுமாரி, மயிலாடுதுறை. 78. ஏ. ஆர். ஸ்ரீராமுலு, சொக்கம்பாளையம் (சேலம்). 79. எஸ். எஸ். குமாரி, திருச்சி — 14. 80. ஜி. ஹெனரி சுரேஷ், சென்னை — 4. 81. டி. தேசிகன், மதுரை — 3. 82. எம். ரமேஷ்குமார், போடிநாயக்கனூர். 83. திருமதி என். ஜெ. ஜெயா, பெங்களூர் — 75. 84. டி. சி. சிவகுமார், பத்ராவதி (கர்நாடகா). 85. கே. எம். ரவிச்சந்திரன், மதுரை — 20. 86. திருமதி லலிதா ஹரி, மதுரை — 1. 87. லலிதா கல்யாணராமன், சென்னை — 44. 88. இரா. செயராமன், புட்பவனம் (வேதாரண்யம்). 89. கே. கணேஷ், சென்னை — 6. 90. பி. கே. வைத்தியநாதன், ஸ்ரீரங்கம். 91. டி. சி. கண்ணன், சேலம் — 16. 92. திருமதி ஹென்றி, சென்னை — 43. 93. ஜி. முருகவேல், மதுரை — 1. 94. எஸ். மங்களம், தூத்துக்குடி — 2. 95. ஆர். இந்திரா, மதுரை — 96. கே. பி. பாஸ்கர், சென்னை — 84. 97. எம். ஜோதி, சென்னை — 15. 98. வி. மாலதி, கோவை — 18. 99. எஸ். வெங்கட்ராமன், கும்பகோணம் — 1. 100. எஸ். அம்சா, பொள்ளாச்சி. 101. பி. நாகு, திருச்சி — 4. 102. பி. கோமதி, ராணிப்பேட்டை (வ. ஆ.). 103. என். பாலசுப்ரமணியன், சென்னை — 28. 104. இரா. காந்திமதி, சென்னை — 15. 105. ஆர். ராஜேந்திரன், ஆத்தூர் (சேலம்) 106. கே. ராகவன், செங்கல்பட்டு — 1. 107. பி. என். விஸ்வநாதன், திருப்பத்தூர். 108. பி. ஆர். இன்பரசி, பாலப்பட்டி (சேலம்) 109. ஆர். நாகசுப்ரமணியன், மேட்டூர் அணை. 110. இரா. செல்வம், மதுரை — 11. 111. ஏ. சுந்தரராஜன், சேலம் — 11. 112. தமிழ்மணி, சென்னை — 14. 113. வி. மாணிக்கம், மயிலாடுதுறை — 2. 114. ஜி. தெய்வசிகாமணி, மயிலாடுதுறை — 1. 115. வி. இராமச்சந்திரன், அகர கொளப்பாடி (610 208). 116. பி. கே. மூர்த்தி, மதுரை — 18. 117. கோ. பொன். விஜய் சிவகுமார், மதுரை — 4. 118. வி. பாலமுருகன், சென்னை — 56. 119. கே. ஜெயலக்ஷ்மி, காரைக்கால். 120. இ. நாகேந்திரன், காரைக்குடி. 121. எம். கே. பாபு, சென்னை — 2. 122. ஜி. பானுமதி, திருச்சி — 1. 123. மா. முத்துக்கருப்புசாமி, திருச்சி — 20.

# மோகம் என்பது இதுதானோ?

## 23

கடந்த ஆறு நாட்களாக அந்த இருட்டு அறையின் மூலையில் சுருண்டு கிடக்கிறாள் ஞானம். சிவகாமி அவ்வப்போது கட்டாயப் படுத்தித் தரும் காப்பியைத் தவிர வேறு உணவு எதுவும் செல்லவில்லை. மனம் துவண்டு, உடல் நெகிழ்ந்து எல்லாமே ஸ்தம் பித்துப் போன ஒரு நிலையில் இருந்தாள் அவள். மனிதர்களுக்குக் கஷ்டம் வரும். ஆனால் இப்படியா? ஒருபுறம் கணவனின் இழப்பு என்றால் மறுபுறம் வயது வந்த மகள் காணாமல் போய்.... கணவர்தான் வலி யின்றி, ரத்தமின்றி, சென்று வருகிறேன் என்று கைகூட ஆட்டாமல் பிரிந்துவிட்டார் என்றால், மகள் உலகின் ஏதோ ஒரு மூலையில் எப்படியோ வாழ்ந்து கொண்டு அவளைச் ...தை செய்கிறாள். ஐயோ..! நினைப்பி... ம்பு துடித்தது. யாருக்கு என்ன ...ல்லுவது? ஊர்ப் பேச்சு அவளை நேரிடையாகத் தாக்காதவாறு நாத்திகள் இரு வரும் அவளைப் பாதுகாத்தார்கள் என்பது உண்மை. ஆனால் அவள் மனம் தானாக எழுப்பும் அவல ஓலத்தை எப்படி நிறுத்து வது?

இந்த அறை இப்போதுபோல் எப்போதும் இருண்டு கிடந்ததில்லை. சின்ன வீட்டிலும், அவர்களின் தனி சாம்ராஜ்யமாக இருந் திருக்கிறது. இந்த அறையில்தான் ஞானம் கணவனுடன் கூடிக் குலாவிக் களித்திருக் கிறாள். தலைவலி என்றால் போதும், மடியில் கிடத்திக் கொண்டு சுந்தரம் அவள் நெற்றி யில் மருந்து தடவியிருக்கிறார். மருந்து பூட்டுமா, ஒவ்வொரு விரல் அசைவிலும் குழைத்துத் தடவிய பாசம், பரிவு. இந்த அறையில்தான் அவள் பிள்ளைகளைப் பெற்றுச் சீராட்டியிருக்கிறாள். புவனா பிறக் கும்போது அவள் தாய் இறந்து சில மாதங் களே ஆகியிருக்க, சுந்தரம் தானே, தாயாகி அவளைச் சீராட்டியிருக்கிறார். பச்சை உடம் புக்கு இதமாக வெந்நீர் வைத்துத் தந்து பத்திய உணவும் தானே சமைத்துப் பரிமாறி யிருக்கிறார். அவள் உணவருந்திய பின் எச்சில் துடைத்துத் தட்டுக் கழுவியிருக்கிறார்.

இதுவெறும் ஆண், பெண் உடலளவிலான உறவு மட்டுமா? உடலையும் தாண்டி நெஞ்சை யும் வருடி, ஆத்மாவை அணைக்கும் ஒரு பந்தமில்லையா... உடல் என்பது வெறும் கருவிதான். அந்த இயக்கும் மூளை மனம் இவை ஏற்படுத்துவதுதான் பாசப்பிணைப்பு.

சுந்தரம் ஏற்படுத்திச் சென்றிருந்த வெறுமை, இழப்பு உணர்ச்சியாக நெஞ்சை அடைத்தது. 'நான் அவரைப் புரிஞ்சுக்காம இருந்துட்டேனே!' ஆரம்பத்தில் ஞானம் குமுறிக் குமுறி அழுதாள். கடந்த ஆறு நாட் களில் அதுகூட அர்த்தமற்றுப் போய்விட் டது. ஓர் ஊசியை நகக் கணுவில் குத்தினால் 'சுரீர்' என வலிக்கும். ஆயிரம் ஊசிகளை உடம்பெங்கும் குத்தினால் எங்கெல்லாம் ஊசி முனை படுகிறது என்னும் உணர்வு கூடப் புரியாமல், வலி என்ற ஒற்றை உணர்வு மட்டுமே வியாபிக்கும். வலியின் ஆதிக்கத் தில் வலி என்ற உணர்வே ஸ்தம்பித்து விடும். ஞானமும் விலக்கல்ல.

அவராவது தான் ஜாம் ஜாமெனப் போய்ச் சேர்ந்து விட்டார். இந்த லோகு, தளதளவெனப் பத்தொன்பது வயதுப் பரு வத்தில் யாரிடமும் சொல்லாமல், தனியே பாதை தேடிச் செல்ல எப்படித் துணிவு வந்தது? பட்டணத்துக்குச் செல்லும் வண்டி யில் ஏறியதைப் பார்த்ததாக யாரோ சொல் கிறார்கள். வீட்டை விட்டு வெளி உலகம் அறி யாத பெண் பட்டணத்தில் தனியே எங்கே போனாளோ? பருந்துகளாகக் கொத்தக் காத்திருக்கும் ஆண்களில் எவனிடம் சிக்கி எப்படியெல்லாம் சீரழிகிறாளோ? உலகம் அறிந்த ஒருவனை நம்பி, அவனுடன் சென் றிருந்தால்கூட மன்னித்துவிடலாம். தனியே, எதைத் தேடி எங்கே போனாள்? ஏனிப்படிச் செய்தாள்? அம்மாவைத் தேடிப் பட்டணத் துக்கு வருவதானாலும் நேர்முகமாகக் கடிதம் எழுதிவிட்டு வரக் கூடாதா?

தன் மகளால்தான் லோகுவுக்கு இந்த நிலை ஏற்பட்டது என்று சிலுவையைத் தான் சுமந்து, துக்கம் விசாரிக்கும் ஊர் ஜனங்களை வாய் திறக்க விடாமல் சிவகாமி தடுத்தா லும், ஞானத்தின் அலை பாயும் மனத்தை எப்படி அடக்குவது? லோகு உயிருடனாவது இருக்கிறாளா? அடி வயிற்றில் சில்லீர் எனக் குளிர் தாக்கியது.

மனமே... சிந்திக்காதே... வலிதான் மிஞ்சும். கண்களே ... அழுகையை நிறுத்துங் கள். அழுது இனிப் பயனில்லை. இந்தத் துடிப்பையும், அவல அழுகையையும் மீறிய

மோன நிலையைத் தா கடவுளே... ஞானத்துக்கு இப்போது தியானம் மட்டுமே அர்த்த முள்ளதாகப் பட்டது. அந்த மன ஈடுபாடு மட்டுமே மனத்தை நிகழ்காலத்துத் துன்பங்களிலிருந்து பிரிக்கவல்லதாயிருந்தது.

''ஞானம், பட்டணத்திலிருந்து யாரோ உங்களைப் பார்க்க வந்திருக்காங்க....''

கதவுக்கு வெளியே ரவீந்திரன் நின்றிருந்தான்... அவனைக் கண்டதும் அடக்கிய துக்கம் மறுபடியும் பீறிட்டு எழுந்தது. ''என் கதியைப் பார்த்தியா தம்பி?''

ரவீந்திரன் கிராமப் பழக்கம் புரிந்தவனாகை அறைக் கதவுக்கு வெளியே குந்துக்காலிட்டு அமர்ந்து அழுதான். ''உங்க தந்தியைப் பார்த்ததுமே ரொம்பக் கஷ்டமாயிருந்தது அண்ணி. பூவும் பொட்டும் கழுத்து நெகிழத் தாலியுமா ஆத்தா மாதிரிப் பார்த்த உங்களை... அதெல்லாம் நெனைச்சுப் பார்க்க முடியல்லையே...''

ஞானம் இன்னும் அதிகமாகத் தாக்கப் பட்டான்.

ரவீந்திரன் சுற்றுமுற்றும் பார்த்துக் குடும்பச் சூழலைக் கணக்கெடுத்தான். ''அண்ணி, செய்தி கேட்டதுமே தலைவரு துடிச்சுப் போயிட்டாரு. நேரில் வந்து பார்த்துத் துக்கம் கேக்க முடியல்லை. போடா தம்பி, ஊருக்குப் போய் அண்ணிக்குத் தொணையா இரு. அவங்களை ஒரு விஷயத்துக்கும் கஷ்டப் படவிடாதேன்னு செலவுக்கும் பணம் கொடுத்து அனுப்பினாரு. இந்தாங்க அண்ணி இந்தக் கட்டுலே ரெண்டாயிரமிருக்கு. கூட வேணுமானாலும் சொல்லுங்க...''

ஞானத்திற்குத் திடீரெனப் புதுப் பலம் வந்தாற்போலிருந்தது. தான் உலகில் தனி இல்லை. தன் துன்பம் புரிந்தவரும் ஒருவர் இருக்கிறார் என்ற துணிவு ஏற்பட்டது.

''அப்புறம் அண்ணி...'' ரவீந்தர் குரலைத் தாழ்த்திக் கொண்டான். ''நீங்க இந்தப் பக்கம் ரயிலேறியிருப்பீங்க. அந்தப் பக்கம் சைக்கிள் ரிக்ஷாவிலே, உங்க விலாசத்தைக் கேட்டுகிட்டு உங்க பெரிய மக வந்து நிற்கிறா. நல்லவேளை, ஊர், பேர், விலாசம் தெரியாம வந்தவ நல்லவன் ஒருத்தன் ரிக்ஷாவிலே ஏறியிருக்கா. அவளைத் தனியா ஊருக்குத் திருப்பி அனுப்பறதா என்ன, ஒண்ணும் புரியல்லை எனக்கு. இப்ப அவளைப் பற்றிக் கவலைப்படாதீங்க. நம்ம தலைவர் நேரடிக் கண்காணிப்பிலே இருக்கா. அவங்க அப்பா இறந்த விஷயத்தை இன்னும் சொல்லலை. அதான் தலைவரு, 'நீ அண்ணி கூடவே இருந்து பதினாறு நாள் சடங்கெல்லாம் முடிச்சு, அவங்களை இங்கே அழைச்சுக்கிட்டு வந்துடு. பெரிய பாப்பாவைப் பத்திக் கவலை வேண்டாம்'னு சொல்லுன்னாரு.''

ரவீந்திரன் பேசப் பேச ஞானத்தின் வயிற்றில் பால் வார்த்தாற்போலிருந்தது. நல்லவேளை லோகு இதுவரை கெட்டழியாமல் நல்லபடியாக, உயிருடனிருக்கிறாள். ஓடிப் போனவள் என்று பெயரெடுத்தாலும், கெட்டுப் போகவில்லை. அதே சமயம் நடு மனத்தில் ஒரு கேள்வியும் எழுந்தது. என்னதான் ம.ரா. ஞானத்தின் மீது உயிரையே வைத்திருந்தாலும், இன்னும் அழகான, இளமையான பெண்ணை அவரிடம் நம்பி

உஷா சுப்பிரமணியன்



அருள்வாக்கு



**ரா**மாயண — பாரதக் கதைகள் நம் தேச ஜனங்களின் ரத்தத்திலேயே ஊறிப் போனவை;

இந்த இதிஹாஸ படனம் குறைந்து போய் விட்ட இந்த நாற்பது, ஐம்பது வருஷத்துக்கு முன்பு வரை பாமர ஜனங்கள் உள்பட எல்லோருமே வெளி தேசத்தார் வியக்கும்படியான நல்லொழுக்கங்களோடு யோக்யமாக இருந்து வந்தார்கள் என்றால் அதற்கு முதல் காரணம் ராமாயணமும் பாரதமும்தான். பாரதப் பிரவசனம் விடாமல் ஒவ்வொரு ஊர்க் கோயிலிலும் நடக்க வேண்டும் என்பதற்காகத் தமிழ் ராஜாக்கள் மானியம் கொடுத்து வந்திருக்கிறார்கள். முப்பது, நாற்பது வருஷத்துக்கு முந்தி வரையில் பூசாரி, உடுக்கடித்துக் கொண்டு பாரதம் பாடுவதைக் கேட்கத்தான் ஜனங்கள் கூட்டம் கூட்டமாகப் போவார்கள். அதுதான் அவர்களுக்கு ஸினிமா, டிராமா எல்லாம். ஆனால் இந்த ஸினிமா டிராமாக்களினால் ஒழுக்கத்துக்கு ஏற்பட்டிருக்கிற ஹானிகள் இல்லாமல், பாரதக் கதை கேட்டுக் கேட்டே அவர்கள் ஸத்யத்துக்கு பயந்து கபடு, சூது இல்லாமல் நல்ல வாழ்க்கை நெறியில் போனார்கள். பாரதத்துக்கு இந்தத் தமிழ் தேசத்திலிருக்கிற மதிப்பு, கிராம தேவதை ஆலயத்தை, ''திரௌபதி அம்மன் கோயில்'' என்று சொல்வதிலிருந்து தெரிகிறது.

புராணத்தில் ஒவ்வொரு கதை, ஒவ்வொரு தர்மத்தைச் சொல்கிறது என்றால் இதிஹாஸத்தின் மையமான கதையில் ஸகல தர்மங்களும் நடத்திக் காட்டப்பட்டிருக்கும். உதாரணமாக, தனிக் கதைகளான ஹரிச்சந்திர உபாக்யானம் ஸத்யம் என்ற ஒரு தர்மத்தை மட்டும் சொல்கிறது. சிரவணன் கதை பிதிரு பக்தியை மட்டும் சொல்கிறது. நளாயினி கதை கற்பை மட்டும் சொல்கிறது. ரந்தி தேவன் கதை பரமத் தியாகத்தை, கருணையை மாத்திரம் சொல்கிறது. ஆனால் ராமர், பஞ்ச பாண்டவர்கள் இவர்கள் வாழ்க்கையைச் சுற்றி அமைந்த இதிஹாஸங்களில் இவர்கள் ஸகல தர்மங்களையும் நடத்திக் காட்டுகிறார்கள்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

ஒப்படைக்கலாமா? அவர் அத்தகைய சபலங்களுக்கு உட்பட்டு ஞானத்தை இழக்க முன்வராமல் இருக்கலாம். ஆனால் அவரைச் சுற்றிச் சுற்றி வரும் தொண்டர் படை.....? எதுவானாலும், நடுத் தெருவில் அலைவதை விட, ம.ரா. பராமரிப்பில் இருப்பது மோசமில்லை.

''அண்ணி... நான் வெளியே தங்கிக்கறேன். அடிக்கடி வந்து போறேன். எது வேணுமானாலும் தயங்காம கேளுங்க...'' என்று ரவீந்திரன் சொன்னபோது ஞானம் தலையசைத்தாள்.

''அக்கா....'' சிவகாமியை அழைத்தாள். குரலைத் தாழ்த்திக் கொண்டாள். ''அக்கா, இந்தத் தம்பி பட்டணத்திலே பக்கத்து வீட்டுத் தம்பி. சொந்தப் பிள்ளை மாதிரிப் பழகும். லோகு அவங்க வீட்டுலே ஜாக்கிரதையா இருக்காளாம். அசட்டுப் பெண் அத்தானைத் தேடணும், எங்கம்மாவைத் தேடி வந்தேன்னு தனியே ரயிலேறிப் போயிருக்கா....''

''பாவிப் பொண்ணு...'' சிவகாமி அங்கலாய்த்தாள். ''அவனை மற என்றாலும் மறக்க மாட்டேன்னுட்டு இப்படி அல்லாடறாளே. சாதுப் பொண்ணு, அவன் நினைப்பிலே இப்படிப் பேரைக் கெடுத்துக்கிட்டுத் தனியா ரயில் ஏறுவாளோ? ஞானம், அவங்க நல்லாப் பார்த்துப்பாங்களா... இல்லே, அத்தானை விட்டு இங்கே கூட்டியாந்துடச் சொல்லட்டுமா?''

''வேணுங்க. அவ புத்தி பேதலிச்சாப்பல இருக்காளாம். அவங்க அப்பா போனதே தெரியாது. இந்த நிலையிலே இங்கே கூட்டிட்டு வந்தா, சடங்குக்கு வரவங்க அவளைக் கேள்வியாலேயே குத்திக் குதறிப்பிடுவாங்க. பக்கத்து வீட்டுக்காரம்மா வயசானவங்க. ரொம்ப நல்லவங்க. அவங்களுக்கு நம்ம குடும்ப விஷயம் தெரியும். லோகுவைப் பக்குவமாப் பார்த்துப்பாங்க. சடங்கு முடியற வரை அவ இங்கே வர வேணாம்...''

''அதுவும் சரிதான்...'' சிவகாமி சரிந்து உட்கார்ந்தாள். ''எந்தம்பி கிட்ட தலை, தலையா அடிச்சுக்கிட்டேன், வேறே நல்ல பிள்ளையாப் பார்த்து மகளைக் கட்டிக் குடுன்னு. அப்பனும், பொண்ணுமா ஒலகத்திலேயே இந்த உதவாக்கரைப் பிள்ளை ஒருத்தன்தான் என்கிற மாதிரி காத்துக் கிடந்தாங்க. எம் புள்ளை துரோகம் செய்தாலும், நம்ம குல தெய்வம் மருமகளையாவது காப்பாத்திச்சே'' சிவகாமி புலம்பினாள்.

இவ்வளவு நல்ல, வெள்ளைக் குணம் படைத்த, கபடமற்ற மனிதர்களை ஏமாற்றுகிறோமே என்ற எண்ணம் ஞானத்துக்குத் தோன்றியது.

மேலே என்ன செய்வது? ஓராண்டுக்கு அவள் வீட்டை விட்டு வெளியேறக் கூடாது என்ற வழக்கத்தையும் மீறி, அவள் துணிந்து கிளம்பித்தான் ஆகணும். இனிமேல் அவளுக்கு இந்த ஊரில் என்ன வைத்திருக்கிறது. கணவன் என்ற பந்தம் அறுந்துவிட்டது. மகள் என்ற பிணைப்போ வேலிதாண்டிக் குதித்து அவளிடமே வந்தாய் விட்டது.

••• புழுவை விடக் கேவலமான மனிதன் பிற ஜீவராசிகளுக்காகப் பரிதாபப்படுவதுதான் பரிதாபம்! தேவைப்படுவது பரிதாபமல்ல, பிற ஜீவராசிகளிடமும் கடவுளைக் கண்டு செய்கின்ற சேவையே!



* காவல் துறையுடன் கலந்துரையாடல்

* கோடையே வருக!
— இதமான கோடைக்குப் பல யோசனைகள்

* பெண்களுக்கு வங்கி அதிகாரியின் அறிவுரை!

ஆனால் இந்தப் புவனா... அப்பாவின் இழப்பால் மிகவும் பாதிக்கப்பட்டிருப்பவள் அவள்தான். அப்பா என்னும் மனிதரும் மண்ணாக முடியும் என்று அவளால் இன்னும் ஒப்புக்கொள்ளவே முடியவில்லை. "உன்னாலே தான் அப்பா போனாரு. நாம அந்தச் சமயம் பக்கத்திலேயிருந்திருந்தா மருந்தாவது தந்திருக்கலாமே..." என்று தாயைக் குற்றம் சாட்டி, கூட்டிக்காட்டிக் கதறினாள். அப்பாவுடன் பேசிச் சிரிக்க ஆவலுடன் வந்தவள், அவர் கட்டையாகிப் போனதைநிஜமென்றே நம்ப மறுத்தாள்.

அம்மாவைக் கோபித்து அழுதாள். அவளிடம் ஆத்திரப்பட்டு அழுதாள். அவளைக் குற்றம் சாட்டிக் கரைந்தாள். "எங்கப்பாவைக் கொன்னுட்டியே... கொன்னுட்டியே..." என்று அவள் குரலெடுத்துக் கத்தும் போதெல்லாம், அத்தைமார்கள்தாம், "புவனா, சின்னப் பெண்ணானை நீ இப்படியெல்லாம் பேசக் கூடாது. உங்கப்பா தலையிலே எழுதியிருந்த ஆயுசு அவ்வளவுதான். உங்கம்மா பக்கத்திலே இருந்திருந்தா மட்டும் என்ன செய்திருக்க முடியும்" என்று சமாதானப்படுத்தினார்கள். ஆனால் அவள் கொடூரமான பார்வையால் ஞானத்தைத் துளைத்தெடுத்தாள். அவள் புலம்பலும், அழுகையும் இவளும் மற்றொரு லோகுவாகி விடக்கூடாதே என்ற பயத்தைத்தான் தந்தன.

ஏற்கெனவே பாட்டு வாத்தியாரிடம் அடம் பிடிக்கும் இந்தப் பெண், காரியங்கள் முடிந்தவுடன், பட்டணத்திற்குப் புறப்படுவாளா? இவளைப் பலவந்தமாகக் கிளப்ப முடியாது. 'எனக்குப் பாட்டும் வேணாம், ஒண்ணும் வேணாம். நான் பாட்டுக் கற்றுக் கொள்ளப் பட்டணம் போனதாலதானே அப்பா போனார்....' என்று சத்யாக்ரகம் செய்தால், ஞானம் எதைக் காரணம் காட்டி பட்டணத்தில் தங்க முடியும்? ம.ரா.வின் ஆசை நாயகி என்று லேபல் ஒட்டிக் கொண்டா? சே, சே, நல்ல குடும்பத்துப் பெண்கள் அப்படியெல்லாம்வாழமுடியுமா? புவனாவுக்குத் தைரியம் கொடுத்து அவளைப் பட்டணத்துக்குக் கிளப்ப வேண்டும். இனி அப்பா ஆசை, ஊர் ஆசை இவையில்லாமல் இசையில் கவனத்தைச் செலுத்தினால், வாழ்வில் முன்னேற நிறைய வாய்ப்புகள் கிடைக்கும். ஏற்கெனவே குரல் டெஸ்ட் முடிந்து, ஒரு பக்தி சினிமாப் பாடல் கூட ரிகார்ட் செய்தாகிவிட்டது. இனிதான், இவள் எதிர்கால வாழ்வும், வெற்றியும் துவங்கப் போகின்றன.

ஞானம் மனத்துக்குள் கேட்டுக் கொண்டாள். 'எனக்கும்தான் இனிமேல் வாழ்வில் என்ன இருக்கு? இங்கே ஊருடன் இருந்தா பழஞ்சீலையைச் சுற்றி மூலையில் உட்கார வைத்துவிடுவார்கள். பண்டிகை, பருவம் என்றால் கூட ஒதுங்கி நிற்கணும். எம் பொண்கள்தானே எனக்கு இனிமேல எல்லாம். அவங்க வாழ்க்கைதான் எனக்கு முக்கியம். புவனாவை எப்படியும் இரண்டு வருஷத்திலே பெரிய பாடகியாகத் தயார் செய்து விடலாம். லோகுவுக்கு நல்ல மாப்பிள்ளை, ஏன் நித்தியாவே கிடைத்துத் திருமணம் செய்து கொடுத்தால் சரி. இல்லாவிட்டால், ம.ரா. விடம் சொல்லி, அவர் மாப்பிள்ளை எடுக்கும் படத்திலே ஒரு ரோல் கேட்கலாமே? அவளும் இப்படிப் புத்தி பேதலிச்சிருக்காம, கலகலன்னு மாறுவா. அழகா, பேச்சா, நடிப்பா, உடல்கட்டா அவளுக்கு எதிலே குறை?" ஞானம் சிதைச் சூடு ஆறுமுன் எதிர்காலத் திட்டங்கள் தீட்டத் துவங்கினாள்.

(தொடரும்)




# ஸா:ப்ட் அண்ட் ஸில்க்கி ஹேர் ரிமூவிங் லோஷன்.










ஸா:ப்ட் அண்ட் ஸில்க்கி ஹேர்
மூவிங் லோஷன்.
இந்த ஹேர் ரிமூவிங் லோஷனை
யோகப்படுத்துவதில் எந்த சிரமமு
மில்லை, சங்கடமுமில்லை.
மிருதுவான மேனி மீது
ரிதாகவும் சீராகவும் பரவுகிறது!
இரண்டு சைஸ்களில் கிடைக்கிறது:
மி.லி. மற்றும் 45 மி.லி.
ஆம்! எத்தனை சிக்கனம்.
ஸா:ப்ட் அண்ட் ஸில்க்கி லோஷன்
ங்கமெங்கும் மென்மை உணர்வு.
45மி.லி.பாட்டில் விலை ரூ. 10.70
வரிகள் தனி)

# ஒவ்வொரு பூமி பூஜையும் நம்பிக்கையின் வெளிப்பாடு.

# அரசு சிமெண்ட் அந்த நம்பிக்கையை உறுதிப்படுத்துகிறது.

பூமி பூஜை செய்யும் ஒவ்வொரு முறையும் கட்டிடக் கலைஞன் தன் உன்னத கட்டிடத்தைக் கட்டும் நம்பிக்கைகளுக்கு உயிரூட்டுகிறான். அந்த நம்பிக்கை அஸ்திவாரத்தில் உன்னத கட்டிடம் உருவெடுக்க உயர்தர கட்டுமானப் பொருட்கள் தேவை.

சிமெண்ட் என்றால் அரசுதான். முறியடிக்க வேறொருவர் இல்லை. கண்டிப்பான தர நிர்ணயங்களுக்கேற்ப தயாரிக்கப்படும் அரசு சிமெண்ட் இன்று நீங்கள் வாங்கக்கூடியவற்றிலேயே மிகச் சிறந்தது.




**தமிழ்நாடு சிமெண்ட்ஸ் கார்ப்பொரேஷன் லிமிடெட்.**

(இது ஒரு தமிழ்நாடு அரசு நிறுவனம்)
எல்.எல்.ஏ. பில்டிங், 735, அண்ணாசாலை,
சென்னை-600 002
தொலைபேசி: 89161 (4 லைன்கள்)
டெலெக்ஸ் : MS 6090,
தொழிற்சாலை: ஆலங்குளம்-626127,
அரியலூர்-621704, தமிழ்நாடு.

பெங்களூர் டிப்போ : 19E, மைசூர் பிரிவுச் சாலை,
பெங்களூர்-560023, போன் : 357659.

எர்ணாகுளம் டிப்போ : மேற்பார்வை கேரளா ஸ்டேட் வேர்ஹவுசிங் கார்ப்பொரேஷன், திருப்புணித்துரா,
(எர்ணாகுளம் மாவட்டம்) போன் : 7965.

புனலூர் டிப்போ : VIII 9, ரெயில்வே ரோடு, ரெயில் நிலையத்திற்கு எதிரில், புனலூர்,
(கொல்லம் மாவட்டம்)

ARASU CEMENT
TANCEM


Portland
POZZOLANA




# அரசு
## சிமெண்ட்

**உங்கள் கனவுக் கோட்டைகளை நனவுக் கோட்டைகளாக்கிட.**

DIPR/675/MS/87 : EFFICIENT



# அழகோ அழகு ஃப்ரெஸ்கா
# அற்புத நறுமணம் ஃப்ரெஸ்கா




கோத்ரெஜ் அறிமுகப்
படுத்துகிறது ஃப்ரெஸ்கா—
அற்புதமான சோப்.

ஃப்ரெஸ்கா—நிறைந்த சுகந்தம்,
நிகரில்லா நறுமண சோப்.

வளமான நுரை—தந்திடும்
வந்திடும் அதிக நாட்களுக்கு
ஃப்ரெஸ்கா சோப்.

அடக்கமான விலையிலே
அற்புதமான சோப் ஃப்ரெஸ்கா.

**அழகான அற்புதமான சோப் வழங்குவோர் கோத்ரெஜ்**

# ஜெயசக்தி

வழங்கும்

## விசேஷ அன்பளிப்புகளுடன் இணைந்த

# டெபாசிட் சேகரிப்பு விழா!

**(1-4-1987 முதல் 30-4-1987 வரை)**

**கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில் பிக்சட் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.**

| 1-வருடம் | 2-வருடங்கள் | 3-வருடங்கள் | 5-வருடங்கள் |
|---|---|---|---|
| 18% | 19% | 20% | 24% |

டெபாசிட் அறிமுகம் செய்வோருக்கும் ஊக்கத் தொகை வழங்கப்படும்.

குறுகிய கால டெபாசிட்டுகளுக்கு கவர்ச்சிகரமான வட்டி வழங்கப்படுவதுடன், மிக மதிப்புள்ள அன்பளிப்புகளும் வழங்கப்படும்.

தொடர்பு கொள்ளவும்

## ஜெயசக்தி பைனான்சியர்ஸ்

(தமிழ் நாடு)

**39, நடேசன் தெரு (2-வது மாடி) சிவா-விஷ்ணு கோயில் அருகில்**
**தி.நகர், சென்னை-600 017. போன் : 442218/445494**

| | | |
|---|---|---|
| பெங்களூர் | : | 24/1-A, மார்கோஸா ரோடு (10-வது கிராஸ்) மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003. போன் : 366971 |
| பாண்டிச்சேரி | : | 11, நேரு தெரு, (கனரா வங்கி எதிரில்) 2-வது மாடி, பாண்டிச்சேரி-605 001. போன் : 6493/6471 |
| கோயமுத்தூர் | : | 666, ராஜா தெரு, (முதல் மாடி) கோயமுத்தூர்-641 001. போன் : 34869 |
| மதுரை | : | 41, வடக்கு வெளி வீதி, (முதல் மாடி) மாடர்ன் லாட்ஜ் ஸ்டாப்பிங், மதுரை-625 001. போன் : 36004/34369 |
| திருச்சி | : | 22, மதுரை ரோடு, (முதல் மாடி) ராஜா தியேட்டர் அருகில், திருச்சிராப்பள்ளி-620 008. போன் : 31376/33397 |
| தஞ்சாவூர் | : | எண் : 2 & 3 முதல் மாடி, ஜி.ஏ. கனால் ரோடு, தஞ்சாவூர்-613 001. போன் : 21626/22286 |
| திருவண்ணாமலை | : | 14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601. போன் : 2483 |
| பட்டுக்கோட்டை | : | 121, தலையாரி தெரு, (முதல் மாடி) பட்டுக்கோட்டை-614 601. போன் : 453 |
| திருநெல்வேலி | : | 9-G, திலக் நகர், மதுரை ரோடு, திருநெல்வேலி-627 001. |

LOTUS/JF/110

**ஜெயசக்தி - திட்டமிட்ட வளர்ச்சிக்கு**

# கன்னியாகுமரி, தருமபுரி, அண்ணா மாவட்டங்களுக்கு ரீ-விசிட்

**கல்கி ஏந்தும் சமுதாயப் பணி**

## மாதம் ஒரு மாவட்டம்



கடந்த ஆண்டு ஜூன், ஜூலை, ஆகஸ்டு மாதக் கல்கி இதழ்களில் கன்னியாகுமரி, தருமபுரி, அண்ணா ஆகிய மூன்று மாவட்டங்களிலும் நாம் விசிட் செய்தபோது, கண்ணால் கண்ட குறைகளைப் பற்றியும் பலரும் நம்மைச் சந்தித்து முறையிட்ட பிரச்னைகளைப் பற்றியும் எழுதியிருந்தோம். அவை பற்றியெல்லாம் அந்தந்த மாவட்டக் கலெக்டரிடம் எடுத்துச் சொல்லி, அவற்றுக்கான பதில்களையும் பெற்றுப் பிரசுரித்திருந்தோம். அவர்களும் அந்தப் பிரச்னைகளுக்கெல்லாம் தீர்வு காண நம்மிடம் உறுதியளித்திருந்தார்கள். அநேகமாக இப்போது தீர்வு காணப்பட்டிருக்கும் என்றும் நம்புகிறோம்.

அப்படி, தீர்வு காணப்பட்ட பிரச்னைகளைப் பற்றியெல்லாம் மக்களுக்குத் தெரிவிக்க வேண்டாமா? குறைகளைச் சுட்டிக் காட்டிய நாம், தீர்வு காணப்பட்ட விஷயங்களையும் சுட்டிக் காட்ட வேண்டாமா? அதற்காகத்தான் மறுபடியும் வரும் மே மாதத்தில் கன்னியாகுமரி, தருமபுரி, அண்ணா மாவட்டங்களுக்கு ரீ—விசிட் செய்யப் போகிறோம்.

அப்போது, ஏற்கெனவே நாம் மதுரை, பெரியார், தஞ்சாவூர் மாவட்டங்களுக்கு ரீ—விசிட் செய்ததுபோல், முன்பு நாம் சென்று பார்த்து வெளியிட்ட பிரச்னைகளுக்கு இப்போது என்னென்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கின்றன என்பதைப் பார்க்கப் போகிறோம். அந்தந்த மாவட்டக் கலெக்டர்கள் நம்மிடம் உறுதி மொழி கொடுத்திருந்தும் நடவடிக்கைகள் எடுக்கப்படாமலிருந்தால், மறுபடியும் அந்தந்த மாவட்டக் கலெக்டர்களைச் சந்தித்து, நடவடிக்கைகள் எடுக்கப்படாததற்கான காரணங்களையும் கேட்டுப் பிரசுரிக்கப் போகிறோம். அதோடு, அவர்கள் எடுத்த நடவடிக்கைகள் பற்றியும் கண்டிப்பாகப் பிரசுரிப்போம்.

எனவே, கன்னியாகுமரி, தருமபுரி, அண்ணா ஆகிய மூன்று மாவட்டங்களிலுமுள்ள வாசகர்கள், ஏற்கெனவே கல்கி இதழ்களில் வெளியான பிரச்னைகள் மீது, அந்தந்த மாவட்டக் கலெக்டர்கள் கொடுத்திருந்த உறுதி மொழிப்படி எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் பற்றி எழுதுமாறு கேட்டுக் கொள்கிறோம். அதோடு, கலெக்டர்கள் சொன்னபடி நடவடிக்கைகள் எடுக்கப்படாமல் இருந்தால், அதுபற்றியும் கல்கி அலுவலகத்திற்கு எழுதுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

கன்னியாகுமரி, தருமபுரி, அண்ணா மாவட்டங்களிலுள்ள வாசகர்கள், தயவு செய்து அந்தந்த மாவட்டங்களிலுள்ள புதிய பிரச்னைகளைத் தவிர்த்துவிட்டு, ஏற்கெனவே கல்கி இதழ்களில் வெளியான பிரச்னைகள் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் பற்றியும் நடவடிக்கை எடுக்கப்படாத அவலம் பற்றியும் மட்டுமே எழுதுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

**கல்கி அலுவலகத்திற்கு உங்கள் கடிதங்கள் வந்து சேர வேண்டிய கடைசித் தேதி: 20.4.87**

**உடனடியாக எழுதி அனுப்புங்கள்!**

**— ஆசிரியர்**

பி.கு: 1. உறையின் மேல் 'ரீ—விசிட்' என்று குறிப்பிடுவதோடு, அந்தந்த மாவட்டப் பெயரையும் சேர்த்து எழுத வேண்டியது மிகவும் அவசியம். புதிய மாவட்டம் பற்றிய அறிவிப்பு வழக்கம் போல் மே முதல் வாரக் கல்கி இதழில் வெளி வரும்.

பி.கு: 2. தற்போது நமது நிருபர்கள் ராமநாதபுரம் மாவட்டத்தில் சுற்றுப் பயணம் செய்து வருகிறார்கள். அவர்கள் சந்திக்கும் பிரச்னைகள், கட்டுரைகள் வடிவிலும் பேட்டிகளாகவும் புகைப்படங்களுடன் கல்கி, ஏப்ரல் 19, 26 இதழ்களில் இடம் பெறும்.

# கே.ஏ.கே. மீண்டும் அமைச்சர் ஆவாரா?

* பி. பாலு, கும்பகோணம்.

**? கல்கியின் சமுதாயப் பணி மாவட்டச் சுற்றுப் *பயணத்துக்கும் எம். ஜி. ஆரின் மாவட்டச் சுற்றுப்பயணத்துக்கும் உள்ள வேறுபாடு என்ன?**

! .நம்பிரதிநிதிகளுக்குடன்ட் அவர்ஜி இடையாது. சுற்றுப்பயணம் போகும் போது சிமெண்ட் தொழிற்சாலையின் ஒரு நாள் உற்பத்தி பாதிக்கப்படாது.

* என். ரவி, திருவெறும்பூர்.

**? நீங்கள் சமீபத்தில் ரசித்த அரசியல் நகைச்சுவை ஒன்று சொல்லுங்களேன்?**

! ஸ்ரீஹரி கோட்டாவில் நமது ராக்கெட் எதிர்பார்த்தபடி மேலே செல்லாமல் சற்றுத் தூரம் போய்க் கவிழ்ந்து விட்டது குறித்து ராஜீவ், ''தோல்வி கண்டு துவள வேண்டாம்'' என்று கூறியதானது, அதே தேதியில் நாளிதழ்களின் அதே பக்கத்தில் வெளியாகியிருந்த தேர்தல் முடிவுகளைப் பார்த்து அவர் தமக்குத் தாமே கூறிக் கொண்ட ஆறுதல் மொழிகளாகவும் அமைந்திருந்தது ஒரு வேடிக்கைதான்! இதை விடப் பெரிய தமாஷ் வேண்டுமென்றால், ஸ்ரீ ரங்கம் ராஜகோபுரம் கும்பாபிஷேகத்தையொட்டிய வானொலி நேர்முக வர்ணனையில் வர்ணனையாளர், எம். ஜி. ஆர். — ஜானகி வருகையை, ''ராமரும் சீதையுமே வந்துவிட்டது போலிருக்கிறது'' என்று கூறியதுதான்!

* ஜி. நீலா, மன்னார்குடி.

**? ப. சிதம்பரமும் கலெக்டரும் சைக்கிளில் சென்றது குறித்து?**

! ஓர் அவசரம் என்றால் எதற்கும் தயாராகிற மனப்பக்குவம். இப்படி இறங்கி வந்து மக்களோடு இணைவது ஜனநாயகத்தில் இன்றியமையாதது. இதை ஒரு சந்தர்ப்பத்துக்கேற்ற நாடகமாக எண்ணாமல் எல்லாத் தமிழக இ. காங்கிரஸ் தலைவர்களும் எப்போதும் பின்பற்றுவார்களேயானால் கட்சி இங்கு வலிமை பெறுவது மட்டுமல்ல, மக்களின் துயர் எத்தகையது என்பது தலைவர்களுக்கும் புரியும்.

* திருமலை கோவிந்தன், மதுரை.

**? மதுரை மாவட்டக் கலெக்டரைச் சென்னைப் பெருநகர் குடிநீர் வாரியத்தின் நிர்வாக இயக்குனராக மாற்றம் செய்யக் காரணம்?**

! சென்னை நகர் ஒரு கடுமையான குடிநீர்ப் பஞ்சத்தைச் சந்தித்துக்கொண்டிருக்கும் இந்த நேரத்தில் வரதராஜுலு போன்ற ஒரு திறமைசாலிதான் அதனுடன் போராடி எப்படியாவது சமாளிக்க முடியும் என்று அரசு கருதுவதுதான் காரணமாயிருக்க வேண்டும். இதுவே, சென்னையில் குடிநீர்ப் பஞ்சம் எப்படி விசுவரூபம் எடுத்து வருகிறது என்பதையும் தமிழக மக்களுக்கு உணர்த்தும்.

* த. சத்தியநாராயணன், அயன்புரம்.

**? ரயில் விபத்து நடந்த பாலத்தில் துஷ்ட தேவதைகளை விரட்டப் பூஜை நடத்த வேண்டும் என்று மாதவராவ் சிந்தியா யோசனை தெரிவித்திருப்பது பற்றி?**

! துஷ்ட தேவதைகள் பாலத்தைத் தகர்த்து விட்டு ஏற்கெனவே ஓடிவிட்டன. அவைகளை விரட்டுவதாவது? வளைத்துப் பிடித்து, தண்டனை யல்லவா அளிக்கவேண்டும்? இதை வலியுறுத்தினால் போதாதா? பாமரத்தனமாக ஒரு மத்திய அமைச்சர் பேசுவது உலக அரங்கிலேயே நமக்குத் தலைகுனிவு ஏற்படுத்தும்.

* எஸ். ராஜகோபாலன், திருக்கோவலூர்.

**? ஏன் இந்த ஸ்ரீரங்கக் குழப்பங்கள்?**

! குழப்பத்தை உண்டாக்கியவர்கள் புரட்சித் தலைவரின் சிஷ்ய கோடிகள்தான். விழாவை ஒத்திப் போட வேண்டுமென்றால்,



● சைக்கிளில் பயணம்



● போராட வருகிறார்!

ஸ்ரீரங்கம் கோபுரத்துக்கு ஆரம்பம் முதல் பொறுப்பேற்று நடத்தி வரும் ஜீயரை அல்லவா அதுகுறித்து முதலில் கலந்தாலோசிக்க வேண்டும்? இந்த அடிப்படைப் பண்பை மறந்ததால் தேவையற்ற ஒரு குழப்பம் ஏற்பட்டது. எப்படியோ எல்லாம் ரங்கநாதன் அருளால் நல்லபடியாக முடிந்தது.

*** அ. அருள், இராமேஸ்வரம்.***

**? அரியலூர் ரயில் விபத்தைப் பார்வையிட ஏன் நமது முதல்வர் மனிதாபிமான முறையில் வரவில்லை?**

! அவர் வராததை மனிதாபிமான முறையில் பார்த்து நாம் பொறுத்துக் கொள்ளவும் தயாராயிருக்கலாம்; ஆனால் முக்கியமான ஓரிரு அமைச்சர்களாவது உடனே பதறித் துடித்துக் கொண்டு ஓடோடி வந்திருக்க வேண்டாமா? ஒருவேளை ரயில் விபத்து என்பது மத்திய அரசின் தலைவலி; நமக்குச் சம்பந்தமில்லாதது என்று எண்ணி விட்டார்களோ? பயணிகளுக்குப் பாதுகாப்பும், தேவைப்படும்போது மருத்துவ உதவியும் அளிக்க வேண்டியது மாநில அரசின் கடமை என்பது நினைவில்லையோ என்னவோ?

*** ஆர். ஜே. பாலன், சிவகங்கை.**

**? ஒரு சீனியர் அதிகாரி மூன்று வருடங்களாவது தொடர்ந்து பணியாற்றினால்தான்**



பாமரத்தனம்



• மண்டை காயும்படி....

**அவரது திறமை வெளிப்படும் என்று ப. சிதம்பரம் கூறியுள்ளது பற்றி...?**

! புதிய பதவியில் நிலைமைகளைப் புரிந்து கொள்ள அதிகாரிக்கு ஓரிரு மாதங்கள் ஆகலாம். அதிகாரிகளின் திறமையைக் கணிக்க ஆறு மாதங்கள் போதுமானது. அவர் உருப்படியான நிரந்தர நன்மைகளை மூன்று வருஷங்களில் செய்யலாம். 3 — 4 ஆண்டுகளுக்கு மேல் ஒரே பதவியில் நீடித்தால் விருப்பு வெறுப்புகளுக்கு அடிமையாகி விடலாம் என்பதால் மாற்றி விடுகிறார்கள். சிதம்பரம் சொன்னது, அவர் விரும்பியோ விரும்பாமலோ, அடிக்கடி அதிகாரிகளையும் அமைச்சர்களையும் இடம் மாற்றிக் கொண்டிருக்கும் பிரதமருக்குச் சூசகமாக அறிவுரை வழங்குவதாய் அமைந்துள்ளது.

*** ப்ரிய பாரதி, போடிநாயக்கனூர்.**

**? கே. ஏ. கிருஷ்ணசாமிக்கு எம். ஜி. ஆர்.**



• மயக்கத்தில் ஏற்பாரா?



• மசாலா விருந்து

**மீண்டும் அமைச்சர் பதவி வழங்கினால்....?**

! தன்மானத்தை இழந்தவரானால் ஏற்பார்.

*** ஆர். எம். சூதன், நீடாமங்கலம்.**

**? மண்டை காயும்படி ஓர் அறுவை ஜோக்?**

! சரியாகப் பத்து நாட்களுக்கு முன் கிரேஸி மோகனின் "மாது மிரண்டால்" நூறாவது நாடகம் பார்த்தேன். காட்சிக்குக் காட்சி, டயலாக்குக்கு டயலாக் சிரித்துக் கொண்டிருந்தேன். அப்படிச் சிரிக்க வைத்த வசனம் ஒன்றை இப்போது நினைவு படுத்திக் கொள்ளப் பார்க்கிறேன். ஒன்றேனும் நினைவு வரவில்லை! எனவே மண்டை காயும் படியான அறுவைகள் அதில் ஏராளமாய் இருந்தது நிரூபணமாகிறது! நினைவில் நிலைக்காத கிரேஸி மோகன் நாடகங்களின் வெற்றிக்கு என்ன காரணம் என்று யோசித்துப்பார்க்கிறேன். நாம்எல்லோருமே அரசின் சட்டங்களுக்கும் சமுதாயக் கட்டுப்பாடுகளுக்கும் அடங்கி, ரொம்ப 'ஜெண்டில் மேன்லி'யாக நடந்து கொள்ள வாழ்க்கையின் ஒவ்வொரு நிமிஷமும் பிரயத்தனப்படுகிறோம். இவற்றிலிருந்து விடுபட்டு நம் இஷ்டப்படி கிரேஸியாக நடந்து கொள்ளும் ஆர்வ உந்துதல் நம் ஒவ்வொருவரிடமும் உள்ளது. நாம் அடக்கி வைத்துள்ள உணர்வுகளை மோகன் மேடையில் நடத்திக் காட்டும் போது நமக்குச் சொல்லி முடியாத மகிழ்ச்சி— கட்டுக்களைத் தகர்த்தெறிந்து விட்டது போன்ற சுதந்திர உணர்வு — உண்டாகிறது. எனவேதான் கிரேஸி மோகனின் நாடகங்கள் ஒவ்வொன்றும் நூறு முறை என்ன, நூற்றுக் கணக்கில் அரங்கேற வாழ்த்துகிறோம்!

*** டி. தாழை பிரபு, குடியாத்தம்.**

**? ரஜினியின் வேலைக்காரன் படம் எப்படி?**

! நம்ம ஊர் மசாலா விருந்தின் இடையில் காஷ்மீரில் தயாரான கேஸரி பேடா ஸ்வீட் பரிமாறியிருக்கிறார்கள்.



* ரூ. 20 பரிசு பெறுபவர்:

அ. அருள்,
20, நடுத்தெரு,
இராமேஸ்வரம் — 623 526.

## பிரதோஷ காலம் — பிரதோஷ வரலாறு

சுக்கில பக்ஷம், கிருஷ்ண பக்ஷம் என்னும் இரண்டு பக்ஷத்திலும் வருகின்ற திரயோதசி திதியில் சூரியாஸ்தமனத்திற்கு முன் மூன்றே முக்கால் நாழிகையும், பின் மூன்றே முக்கால் நாழிகையுமாய் உள்ள காலமே பிரதோஷம் எனப்படும்.

### பிரதோஷ வரலாறு

### தசமி திதியன்று (பத்தாவது நாள்) நடந்தது:

தசமி திதி அன்று ஒருவேளை உண்டு இந்திராதி தேவர்களும் அசுரர்களும் மந்திரகிரியை மத்தாகவும், வாசுகி என்ற நாகராஜனைத் தாம்புக் கயிறாகவும் அமைத்தார்கள். அசுரர்கள் தலைப்புறமாகவும் தேவர்கள் வால்புறமாகவும் நின்று அமிர்தம் கடையலானார்கள். கடைந்தபோது வாசுகி நஞ்சை உமிழ்ந்தது. கடலில் இருந்தும் நஞ்சு தோன்றியது. வாசுகி கக்கிய ஆலமும் கடலில் தோன்றிய ஆலமும் ஒன்று சேர்ந்து ஆலாலம் எனப் பேர் பெற்றது. அக்கொடிய விடத்தை வானவர்கள் விருப்பப்படி அடியவர்களாகிய அமரர்கள் உய்ய அமுதம் போல் சிவபெருமான் உண்டருளினார்.

### ஏகாதசி திதியன்று (பதினோராவது நாள்) நடந்தது:

சிவபெருமான் சொற்படி தேவர்கள் மறுபடியும் பாற்கடலைக் கடைந்தார்கள். ஏகாதசியன்று பகல் முழுவதும் பட்டினி இருந்து இரவு முழுவதும் உறக்கமின்றி பாற்கடலைக் கடைந்தார்கள்.

### துவாதசியன்று நடந்தது (பன்னிரண்டாவது நாள்):

துவாதசியன்று அதிகாலையில் அமிர்தம் கிடைத்தது. அதைத் தேவர்கள் பகிர்ந்து உண்டார்கள். அந்த மகிழ்ச்சியில் தேவர்கள் துவாதசியன்று ஆடியும் பாடியும் பொழுதைப் போக்கினார்கள்.

### திரயோதசி அன்று நடந்தது (பதிமூன்றாம் நாள்):

தேவர்கள் சிவபெருமானை முன்னாலே வணங்காது பொழுது போக்கிய தங்கள் குற்றத்தை உணர்ந்து சிவபெருமானிடம் பணிந்து தங்கள் குற்றத்தை மன்னித்தருளுமாறு வேண்டினார்கள்.

பரம கருணாநிதியாகிய சிவபெருமான் மகிழ்ந்து தேவர்களுக்கு அருள் புரியத் திருவுளம் கொண்டு கயிலையில் அன்று மாலை (4.30 மணி முதல் 6.00 மணி வரை.) பிரதோஷ வேளையில் தவத்திரு முன் இருந்த ரிஷப தேவரின் இரு கொம்புகளுக்கிடையில் நின்று அம்பிகையைக் காணத் திருநடம் செய்தருளினார். தேவர்கள் அதனைத் தரிசித்து சிவபெருமானை துதி செய்து வணங்கினார்கள். அது முதல் திரயோதசி திதியன்று மாலை நேரம் பிரதோஷம் ரஜனீ முக வேளை பாபத்தை போக்கும் நேரம்.)

## பிரதோஷ பூஜாபலன்:

சிவ மூர்த்திக்குரிய பல வித விரதங்களில் தலையாயது. இவ் விரதத்தை அநுஷ்டிப்போர் துன்பங்களினின்றும் நீங்கி இன்பத்தை எய்துவர்.

## பிரதோஷ மகிமை:

சிவபெருமான் பிரதோஷ காலத்தில் இடப தேவரின் இரு கொம்புகளுக்கிடையே உயிர்கள் உய்யும் பொருட்டு திருநடம் புரிந்தார். அப்போது சரஸ்வதி வீணை வாசித்தாள். இந்திரன் புல்லாங்குழல் ஊதினார். பிரம்ம தேவர் தாளம் போட்டார். இலட்சுமி தேவி பாடினாள். திருமால் மிருதங்கம் வாசித்தார். தேவர்கள், முனிவர்கள், சித்தர்கள், யக்ஷர்கள், கின்னரர்கள், திசை பாலர்கள் முதலிய அனைவரும் வந்து பிரதோஷ காலத்தில் இறைவனை வழிபடுகிறார்கள்.

# 23

"அதுவும் நல்ல ஐடியாதான்" என்றான் ரத்தினம். "நந்தகுமாரைக் கலெக்டர் வீட்டுக்கு நானே அழைச்சிட்டுப் போறேன்."

ரத்தினத்தின் பணிவு இந்திராவைப் பயமுறுத்தியது. இந்தப் பணிவுக்குப் பின்னால் கூட மாயகிருஷ்ணன் இருக்கலாம். பாண்டியனை முடித்த மாதிரி நந்துவையும் முடித்து விடும் திட்டமாய் இருக்கலாம். நந்துவைப் பார்க்கும் வரையில் மனசு ஓயாது என்று இந்திராவிற்குப் புரிந்தது.

"தங்கராஜு!"

"என்ன அண்ணி?"

"நீங்க போங்க. போய் நந்துவை ஜாக்கிரதையாப் பாத்துக்குங்க."

"அண்ணி...' இப்ப நான் வெளியே போனால் அந்தப் பசங்க உள்ளே வந்துடுவாங்க..."

"என்னைப் பத்திக் கவலைப்படாதீங்க... நந்துதான் முக்கியம்..." சொல்லி முடிப்பதற்குள் அவள் தொண்டையைக் கிழித்துக் கொண்டு விம்மல் புறப்பட்டது.

"என்னை நம்பலை போலிருக்கு அவங்க..." ரத்தினத்தின் குரல் குறைந்து போனது. "அவங்களை நான் தப்புச் சொல்லலை... தங்கராஜ் நீ என்கூட வரதைப் பத்தி



எனக்குக் கவலையில்லே... ஆனால் இவங்களைத் தனியா விட்டுட்டுப் போலாமான்னு யோசிச்சுப் பாரு..."

தங்கராஜ் இந்திராவிடம் வந்தான். "அண்ணி... ரத்தினம் எதுக்காக இவ்வளவு தூரம் வந்து முதலாளியைப் பத்திச் சொல்லணும்? கூட நாலு ஆளுங்களை அழைச்சிட்டு வந்து என்னையே குண்டுக் கட்டாத் தூக்கிட்டுப் போக முடியுமே அவனால்! ரத்தினத்தை நம்பலாம் அண்ணி."

"நந்துவை நான் . உடனே பார்க்கணுமே..." இந்திரா அடம் பிடிக்கும் அழுகையோடு சொன்னாள்.

"நந்துவை உயிரோட பார்க்கணும்னா நாளைக் காலை வரைக்கும் நீங்க பொறுத்துக்கணும் அண்ணி..."

தங்கராஜின் அந்த அஸ்திரம் வேலை செய்தது.

"என்னால நந்துவுக்கு எதுவும் ஆயிடக் கூடாது. என்னால நந்துவுக்கு எதுவும் ஆயிடக் கூடாது..." இந்திரா விடாமல் புலம்பினாள்.

"**எ**ங்கம்மா நல்லா இருக்காங்களா அண்ணே?"

நந்தகுமார் ஆயிரத்து சொச்சம் தடவை அதையே கேட்டுவிட்டான்.

"நல்லா இருக்காங்க, தொரை. தங்கராஜ் கூடவே இருக்கானில்ல, கவலைப்படாதே. வெளியே இருக்கிற பசங்க ஒருத்தனும் உள்ளே போகக் கூடாதுன்னு நான் வேறே மெரட்டிட்டு வந்திருக்கேன்."

"கலெக்டர் ஐயா இப்ப நம்மளைப் பார்ப்பாராண்ணே?"

"உனக்குத்தான் அவரை ஏற்கெனவே நல்லாப் பழக்கமாமே..."

"டவுனுக்கில்ல போவணும்? இந்நேரத்துக்கு எப்படிண்ணே போக முடியும்?"

"நெலாவிலேயே கலெக்டரு இருக்கட்டுமே, போவ முடியாதா? இந்த ஊர்ல ஓடற ரெண்டு டாக்ஸியும் ரத்தினம் பேர் சொன்னா மிரண்டுக்கிட்டுக் கெளம்பும். நீ வா மாப்பிள்ளே, நான் அழைச்சிட்டுப் போறேன்."

**ட**வுனில் கலெக்டர் பங்களாவை 'இரவில் இங்கே சூடான இட்லி தோசை கிடைக்கும்' கடையில் அடையாளம் காட்டினார்கள்.

கலெக்டர் பழைமை தோய்ந்த பெரிய பங்களாவில் இருந்தார். கேட் பூட்டியிருந்தது. சில அசோக மரங்கள் சலசலத்தன. நாகலிங்க மரம் ஒன்று, காற்றின் வேண்டுகோளுக்கு இணங்கி ஒரே ஒரு பூவை உதிர்த்தது.

ரத்தினம் டாக்ஸியிலிருந்து வெளிப்பட்டான். பூட்டிய கேட்டை வேகமாகத் தட்டினான். அவன் செயலில் பதற்றம் இருந்தது. மெலிதான பெருமிதம் இருந்தது. நந்தகுமார் திகிலோடு, கவலையோடு டாக்ஸியிலிருந்து இறங்கி ரத்தினத்தின் பக்கத்தில் நின்றான்.

காம்பவுண்டிற்குள் இருந்த மரக்காபினில் சத்தம் கேட்டது. ஒரு காக்கிச் சட்டை எழுந்தது. போலீஸ்காரராக இருக்க வேண்டும்.

"யாருய்யா அது?" என்று அங்கிருந்தே அதட்டல் வந்தது.

"பக்கத்து ஊருங்க. ஊர்ல கொலை விழுந்துருச்சிங்க. கலெக்டரைப் பாக்கணும். அவசரம்" என்றான் ரத்தினம்.

"எல்லாம் காலையில பாத்துக்கலாம் போ..."

"இல்லீங்க ரொம்ப அவசரங்க..."

"கலெக்டருக்கு என்னைத் தெரியுங்க... என் பேரைச் சொல்லுங்க" என்றான் நந்தகுமார், நழுவும் டிராயரை மேலேற்றிக் கொண்டே.

போலீஸ்காரர் சிரித்தார். "கொஞ்ச நேரம் பொறுத்துக்க. விடிஞ்சிடும். கலெக்டர் முழிச்சுக்குவாரு... அப்புறம் பாக்கலாம்..."

ரத்தினத்திற்குப் பொறுமை விட்டுப் போனது.

"யோவ், உள்ளே போய்ப் பசுபதி கோயில் லேர்ந்து நந்தகுமார். வந்திருக்கான்னு சொல்லுயான்னா..." என்று குரலை உயர்த்தினான்.

சடாரென்று மாளிகையின் வெளி விளக்குகள் எரிந்தன.

"ஹூ இஸ் இட்?" என்று குரல் கம்பீரமாகக் கேட்டது. கதவு திறந்து, கலெக்டர் லுங்கியில் வெளிப்பட்டார். இந்த உடையில் இன்னும் சிறியவராகத் தெரிந்தார்.

நந்தகுமாரைப் பார்த்ததும் முகம் பிரகாசமானது.

"நந்தகுமார்! கமான் கமான். என்ன இந்த நேரத்தில?"

போலீஸ்காரர் அவசரமாய்க் கேட்டைத் திறக்க, நந்தகுமார் புரளும் அழுகையோடு உள்ளே ஓடினான்.

**ஜீ**ப் பறந்தது. கலெக்டர் முன்சீட்டில் அமர்ந்திருந்தார். பக்கத்தில் நந்தகுமாரை உட்கார வைத்திருந்தார்.

"ஐ நோ தட் பாண்டியன்!" என்றார், வருத்தம் தோய்ந்த குரலில். "நீ ஆஸ்பிடல்ல இருந்தப்ப காப்பி வாங்கிட்டு வந்து கொடுப்பானே... எவ்வளவு நல்ல மனுஷன்!"

நந்தகுமார் சின்னச் சின்ன விசும்பல்களில் குலுங்கிக் கொண்டிருந்தான்.

கலெக்டர் அவன் தோளில் தட்டிக் கொடுத்தார். "அழக் கூடாது. நந்தகுமார். ஆம்பிளைப் பையன் அழவே கூடாது."

ஜீப்பின் பின் சீட்டில் இரண்டு போலீஸ்காரர்களுக்கு நடுவே ரத்தினம் உட்கார்ந்திருந்தான். கண்களைச் சுருக்கிக் கொண்டு பேசினான்.

"மொதலாளியோட ஆளுங்க யார் யார் எங்கே எங்கே இருப்பாங்கன்னு நான் சொல்றேன். ஆனா நீங்க டிரெஸ்ல வந்தா ஜாக்கிரதையாயிடுவானுங்க... அதை மட்டும் கொஞ்சம்

சுபா

பாத்துக்குங்க...'' என்று மாயகிருஷ்ணனின் திட்டமிட்ட கோட்டையைத் தகர்ப்பதற்கான ஆயத்தங்களில் இறங்கினன்.

ஜீப்பிலிருந்து இடைவெளி விட்டு ஒரு வேன் நிறைய போலீஸ். போலீஸ் சூப்ப ரண்டெண்டன்ட் தம் ஆட்களை அமைத்துக் கொண்டிருந்தார்.

இரண்டு வண்டிகளும் இருளைப் பெருக்கித் தூக்கி எறிந்து கொண்டு பசுபதி கோயில் எல்லையைத் தொட்டபோது. –

வானத்தில் இன்னும் நட்சத்திரங்கள் பாக்கி இருந்தன.

சுவர் ஓரத்தில் ஒடுங்கிக் கொண்டு இந்திரா படுத்திருந்தாள்.

தங்கராஜ் மெல்ல எழுந்து கொல்லைத் தோட்டத்திற்குள் போனன். பாண்டியன் செலவழித்த சொற்ப நேரத்தில் இரண்டு வாழைகள், சில தென்னங்கன்றுகள், ஒரு மாமரத்தின் ஆரம்பம் எல்லாம் காற்றில் சிணுங்கிக் கொண்டிருந்தன. விடியலுக்குத் தயாராகும் வானத்தில் மென்சாம்பல் உதிரும் நேரம். தங்கராஜ் தேடியது கிணற்றடித் தண்ணீர்த் தொட்டியருகே கிடைத்தது.

நீட்டப்பட்ட பிறை நிலா போல் பள பளத்த அரிவாள். அதை அள்ளி எடுத்து, அதன் கூர்மையில் விரலை ஓட்டிப் பார்த்தான். தளும்பி வந்த சிவப்பு முத்தை ரசித்தான்.

வாசல் கதவு தடதடவென்று தட்டப்படும் ஓசை கேட்டது. கூடவே நந்தகுமாரின் கன்றுக் குரலில் '', அம்மா, அம்மா...''

தங்கராஜ் அரிவாளை அதே இடத்தில் போட்டு விட்டு வாசலுக்கு ஓடினன். அவனை முந்திக் கொண்டு விரித்த தலையோடு இந்திரா கதவைத் திறந்திருந்தாள்.

''அம்மா...'' நந்தகுமார் இந்திராவின் கால்களை அப்படியே அணைத்துக் கொண்டான். அந்தத் தழுவலில் இந்திரா சற்றே தடுமாறி அப்படியே அவன் உச்சியில் உதடுகளை வைத்து, ''நந்தா'' என்று முனகி, முகத்தை அவனேடு தேய்த்து, அதற்கு மேல் கட்டுப்படுத்த முடியாமல் பெரிதாக அழ ஆரம்பித்தாள். ''கலெக்டரு, நீ இனிமேல் அம்மாவை விட்டு அந்தண்டை இந்தண்டை போகக்கூடாது!' தங்கராஜ் அன்பாக மிரட்டினன்.

''ஐ'ம் ஸாரி. வெரி ஸாரி...'' என்று ஆரம்பித்து மேலே என்ன சொல்வதென்று புரியாமல் கலெக்டர் விழித்துக் கொண்டிருக்க, தங்கராஜ் தடாலென்று அவர் கால்களில் விழுந்தான்.

''அய்யா... நீங்க வந்துட்டீங்க... எங்களுக்கு இனிமேல் கவலையில்லீங்க...''

அவ்வளவு பெரிய ஆண் மகன் இப்படிக் காலில் விழுந்ததைப் பார்த்து கலெக்டருக்குப் பரிதாபமாயிருந்தது.

''எழுந்திருப்பா... எழுந்திரு...'' என்ருர். ''நந்துவையும் அவங்கம்மாவையும் ஜாக்கிரதையாப் பாத்துக்க,... நான் மொத்த விவகாரத்தையும் முடிச்சிட்டு வர்றேன்...''

''அய்யா... அந்தத் திருட்டு மொதலாளி கைல வெலங்கு மாட்டிட்டீங்களா?'' தங்கராஜின் கண்களும் சேர்ந்து சூடாயின.

''அத்தனை அடியாட்களையும் மடக்கியாச்சு. மாயகிருஷ்ணன் வீட்டைச் சுத்தி டேரா போட்டாச்சு... அங்கேதான் நான் போயிட்டிருக்கேன்...''

கலெக்டர் கிளம்பி வாசல் புறம் போனதும், தங்கராஜ் அவசரமாகக் கொல்லைப்புறம் போனன்.

மாயகிருஷ்ணன் கொட்டாவியோடு விழித்தார்.

உடம்பு லேசாக வியர்த்திருந்தது. அவசரத்தில் ஏர்கண்டிஷனைப் போட்டுக் கொள்ளாமல் படுத்துத் தூங்கி விட்டதை உணர்ந்தார்.

விழித்ததும் முதல் நினைவாக நந்தகுமாரைப் பிடித்தார்களா இல்லையா என்ற கேள்விதான் முன்னல் வந்து நின்றது.

அறைக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தார். சொட்டேர் என்று பின்னங்கழுத்தில் யாரோ அறைந்து விட்டது போல் நின்ருர்.

ஹாலை போலீஸ் நிரப்பியிருந்தது.

''எ... என்னங்க இது... இவ்வளவு காலைல இத்தனை ஜமாவோட வந்திருக்கீங்க?''

போலீஸ் சூப்பரண்டெண்டன்ட் அவரை நெருங்கிக் கன்னத்தில் புறங்கையால் ஓர் அறை விட்டார். மாயகிருஷ்ணன் தடுமாறி ஓரடி பின்வாங்கினுர்.

''இன்ஸ்பெக்டரு... இதுக்குப் பின்னல பதில் சொல்லப் போறே... நான் யாரு தெரியுமா உனக்கு?''

இன்னெரு முறை கை ஓங்கப்பட்ட போது, கலெக்டரின் குரல் குறுக்கில் வந்தது. ''ஸ்டாப் இட், எஸ். பி! அரெஸ்ட் ஹிம்.''

''கலெக்டர் சார், அவசரப்படாதீங்க... நான் சொல்றதைக் கேளுங்க...'' மாயகிருஷ்ணன் பதறினுர்.

''கோர்ட்டுல எல்லாம் கேட்டுக்கலாம். இப்ப ஜீப்புக்கு நடங்க...''

மாயகிருஷ்ணன் தம் வாழ்நாளில் அந்த மாதிரி ஓர் எதிர் பதிலைச் சந்தித்ததேயில்லை. எஸ். பி. யைப் பொசுக்கும் கண்களோடு வெறித்தார்.

வீட்டு வாசலில் திருவிழா போல் கூட்டம் சேர்ந்திருந்தது. மாயகிருஷ்ணன் ஒரே இரவில் இருபது வயது கூடியவர் போலத் தெரிந்தார். நிமிராத கண்களோடு ஜீப்பைப் பார்த்து நடக்க ஆரம்பித்தார்.

காம்பவுண்டை விட்டு வெளியே வந்த போது, கூட்டத்திலிருந்து தங்கராஜ் விலகிக் கலெக்டரை இரண்டே எட்டில் அண்டினன்.

''அய்யா, நீங்க இழுத்துக்கிட்டுப் போறதுக்கு, முன்னல இந்தாளை நான் ஒரே ஒரு கேள்வி கேக்கணும்... கேக்க விடுங்கய்யா...'' இடுப்பில் டவலை மடித்துக் கட்டாமல் பிரித்துக் கட்டியிருந்தான்.

கலெக்டர் அவனைப் பார்த்தார். ரத்தினம் சொன்னதிலிருந்து, பரிமளா பற்றித்

*** ஒரு மதத்தைப் புரிந்து கொள்ள துப்பறியும் போலீஸ் மனப்பான்மையுடன் அதனை அணுகக் கூடாது. அதைப் புரிந்து கொள்ளும் பரிபக்குவத்தையே அது இழக்கச் செய்துவிடும்.



''நம்ம பிரதமருக்கு இருக்கிற பிரச்னைக்கும் எனக்கு உள்ள பிரச்னைக்கும் கொஞ்சம்தான் வித்தியாசம்.''

''அப்படியா...? ஆச்சர்யமாயிருக்கே.''

''ஆமாம். பிரதமருக்கு 'சிலோன்' பிரச்னை. எனக்கு 'லோன்' பிரச்னை!''

— கிணத்துக்கடவு ரவி

---

தங்கராஜ் நிச்சயம் மாயகிருஷ்ணன் முகத்தில் காறித் துப்ப ஆசைப்படுவான் என்று நினைத்தார். ஆனால் பொதுவில் எந்த நாடகமும் நடப்பது நல்லதல்ல என்றும் பயந்தார். சற்றே தயங்கினார். தங்கராஜுக்கு அந்தத் தயக்கம் சாதகமானது.

''வேண்டாம் தங்கராஜ்...'' என்ற வார்த்தைகளை அவர் உதிர்க்குமுன், தங்கராஜ் மாயகிருஷ்ணனை நோக்கிப் பாய்ந்து விட்டான். இடுப்புத் துண்டு மறைவிலிருந்து அந்த அரிவாள் மின்னல்களைச் சிதறடித்துக் கொண்டு எப்போது வெளி வந்தது? எப்போது அதை மாயகிருஷ்ணனின் கழுத்தில் மிகச் சரியாக இறக்கினான்?

''உன் நெஞ்சில் ஈரம்தான் இல்ல. ரத்தமாவது இருக்குதே...''

முடுக்கி விட்ட இயந்திரம் போல் அவன் கையை மறுபடியும் உயர்த்திய நேரம், போலீஸால் உடன் மடக்கப்பட்டான். கூட்டம் மொத்தமும் ஸ்தம்பித்திருந்தது.

மாயகிருஷ்ணன், அவர் ஆட்சி செய்த பூமியில் சரிந்து கிடந்தார்.

''உடனே ஆம்புலன்ஸுக்கு போன் பண்ணுங்க...'' கலெக்டர் எல்லோரையும் விலக்கிக் கொண்டு மையத்திற்கு வந்தார்.

மாயகிருஷ்ணனின் அருகில் மண்டியிட்டிருந்த போலீஸ் அதிகாரி உதடுகளைப் பிதுக்கிக் கொண்டே எழுந்தார். ''நோ சான்ஸ், கலெக்டர்.''

போலீஸின் பிடியில் தங்கராஜ் திமிறுமல், ''பரிமளா... பரிமளா...'' என்று அரற்றத் தொடங்கினான்.

**இ**ந்திரா டிரங்குப் பெட்டியை அழுத்தி மூடி, அதன் கொக்கியைப் பொருத்தினாள். இன்னொருபுறம் நந்தகுமார் தன் டிராயர் சட்டைகளைப் பிரம்புக் கூடையில் திணித்தான்.

ஜெயபாலும், சுகந்தியும் மெத்தைகள் நீக்கப்பட்ட கட்டிலின் விளிம்பில் உட்கார்ந்திருந்தார்கள். சசிகலா இங்கே அங்கே நிற்காமல் அலைந்து கொண்டேயிருந்தது.

''இந்த ஊரை விட்டே போயிடறதுன்னு முடிவு பண்ணிட்டியா, இந்திரா?'' ஜெயபால் யோசித்து யோசித்துக் கேட்டான்.

''ஆமாண்ணா!'' இந்திரா துணிப் பையை மூடிக்கொண்டே சொன்னாள். பசுபதி கோயிலுக்கு நான் வந்து எறங்கினதிலேர்ந்து என்னென்னவோ நடந்து போச்சி. இனிமேல் இங்க இருக்க எனக்கு மனசு எடம் கொடுக்காது...

''எங்கே போவே இந்திரா?''

டவுனுக்கு வந்திடுங்கன்னு சொல்லியிருக்காரு கலெக்டரு... பாலசேவிகா உத்தியோகத்துக்குச் சிபாரிசு பண்றேன்னு சொன்னாரு... நந்துவோட படிப்பு செலவெல்லாம் தானே ஏத்துக்கறேன்னு சொல்லியிருக்காரு... போலாமா நந்து?''

''பஸ் ஸ்டாண்டு வரைக்கும் நான் வரேன் இந்திரா.''

ஜெயபால் பெட்டியை எடுத்துக் கொண்டான்.

''பை பை நந்து'' என்றாள் சசிகலா. ''மறந்துடாதே எங்களையெல்லாம்.'' என்றாள் சுகந்தி.

**ப**ஸ்ஸில் ஜன்னலோரத்தில் சீட் கிடைத்தது. ரைஸ் மில்லைத் தாண்டி, வாய்க்கால் பாலத்தைக் கடந்து, ஐயனார் சிலையை, கோயிலைக் கண்ணாரத் தரிசித்து ஏர்ஹாரன் அலறலோடு பஸ் பசுபதி கோயிலைத் துறந்து ஓடியது.

''அம்மா...'' காற்றோடு குரலைக் கரைத்துக் கூப்பிட்டான் நந்தகுமார். அம்மாவை நிமிர்ந்து பார்க்கும் போதெல்லாம் குற்ற உணர்ச்சி மனத்தில் அலை மோதியது. இந்த அம்மா வாழ்ந்திருக்கக் கூடிய சில சந்தோஷமான நாட்களையும் நான்தானே காலடியில் போட்டு நசுக்கிவிட்டேன்! அம்மா, இனிமேல் உன் நிழலை விட்டு நான் விலகவே மாட்டேன்...

''என்ன நந்து?'' இந்திராவின் புடைவை காற்றில் பறந்து நந்தகுமாரின் முகத்தை வருடியது.

''இந்தப் புடைவை உனக்கு நல்லா இருக்கும்மா...''

இந்திரா குனிந்து தன்னைப் பார்த்துக் கொண்டாள். குண்டு மல்லிகை டிஸைன் தெளிக்கப்பட்ட கருநீலப் புடைவை. புடைவையில் நந்தகுமாரின் உழைப்பின் வாசம் இருந்தது.

இந்திரா,நந்தகுமாரை இழுத்து அணைத்துக் கொண்டாள். 'துணையாக உன்னோடு என்றும் நான் இருப்பேன்' எனும் ஆறுதல் சேதியா, இல்லை 'என்னை விட்டு நீ போய் விட மாட்டாயே?' என்று ஆதரவு தேடும் அச்சமா — இந்திராவின் அணைப்பில் என்ன இருந்தது? நந்தகுமாருக்குப் புரியவில்லை.

**இந்த பஸ் பயணத்துடன் இந்தக் கதைப் பயணத்தை நிறுத்திக் கொள்கிறோம். ஆனால், இந்திராவின், நந்தகுமாரின் வாழ்க்கைப் பயணம் கனவுகளோடு இனியும் — தொடரும் —**



**வாழ்க்கை வளம் பெற...**

பாட்டைக் கட்டுப்படுத்த விரும்பும் மனிதர் விருந்துகளுக்குப் போவது உசிதமல்ல.

புத்தர் வெகுநாள் வரை பெண்களைச் சீடராக ஏற்றுக் கொள்ளவில்லை. ஹாவாயியிலிருக்கும் தவத்திரு சுப்பிரமுனிய சுவாமி, கடவுள் கோயிலில், பெண் தெய்வங்களின் சிலைகளைக் கூட நிறுவவில்லை. நமது கட்டுப்

# கட்டுப்பாடும் சுதந்திரமும் கைகோத்துச் செல்லட்டும்!

மனக் கட்டுப்பாடு என்னும் புத்தகத்தின் பக்கங்கள்தான் விரதங்கள் எல்லாம். சோமவார விரதம், கந்தசஷ்டி விரதம், கார்த்திகை நோன்பு, சபரிமலை வேண்டுதல் என்று பல வகைகளில் வாழ்வில் மனிதன் மனக்கட்டுப்பாட்டை வளர்த்துக் கொள்ள முயல்கிறான்.

பாஞ்சாலி சபதம், கண்ணகியின் சினம், சிவகாமியின் சபதம் எல்லாம் மனக்கட்டுப்பாட்டின் மிகப் பெரிய இயக்கங்கள்; அத்தியாயங்கள்.

பிரம்மசரிய விரதம் என்பது காம எண்ணங்களின் கட்டுப்பாடு மட்டுமல்ல, அது சுய வளர்ச்சியின் உன்னத நிலையை அடைவதற்கான துவக்கம்.

நமது எண்ணம்தான் நமது செயலைத் தூண்டுகிறது. ஆகவே, நமது கட்டுப்பாட்டை வளர்க்கும் எண்ணங்களை நாம் வரவேற்க வேண்டும். இல்லையென்றால் எண்ணங்களோடு கட்டுப்பாடும் நம்மை விட்டு அகலும்! சுயக் கட்டுப்பாடு மனத்தில்தான் துவங்குகிறது. அதை மன உறுதி என்று கூறலாம். பிடிவாதம் என்றும் கூறலாம்.

ஒரு நோக்கத்தையும் அதனை அடையும் வழியையும் ஆராய்ந்து பார்த்தோமானால், கட்டுப்பாடு, ஒழுங்கு, நெறி ஆகியவை வாழ்வுக்கு இன்றியமையாதவை என்பது புரிய வரும். இதைத்தான் எலிசபெத்ஹெய்க் என்ற அறிஞர் 'விழிப்புணர்வு' என்று எழுதுகிறார். இந்த விழிப்புணர்வு சதாசர்வ நேரமும், முக்கியமாக முடிவெடுக்கும் சமயங்களில் நமக்கு வழிகாட்டுமானால் வாழ்வில் வெற்றி காண்பது எளிதாகும்.

கட்டுப்பாட்டைக் கடைப்பிடிக்கும் மன உறுதிக்கு எது உதவுகிறது? நமது கட்டுப்பாட்டைச் சோதிக்கும் சூழ்நிலையில் நம்மை வைத்துக் கொள்ளாமல் இருப்பது நல்லது. துறவறம் பூணும் இளைஞன் இளம் பெண்களுக்கு ஞானம்புகட்டும்சூழ்நிலையில்தன்னை வைத்துக் கொள்வது நல்லதல்ல. சாப்பாட்டைச் சோதிக்கும் — தகர்க்கும் — எந்த எண்ணம் வந்தாலும் அதைத் தொடராதீர்கள். பிரம்மசரியத்தைப் பற்றி எழுதும் நமது நூல்கள் உணர்வுகளைத் தூண்டி விடும் உணவுப் பொருள்களான பூண்டு, வெங்காயம், மிளகாய், தேநீர், சர்க்கரை, நெய் ஆகியவற்றையும் சுருட்டு, பீடி, மது போன்றவற்றையும் ஒதுக்குமாறு எழுதுகின்றன.

கட்டுப்பாடுகள் கைவர நாம் முக்கியமாகச் செய்ய வேண்டியது: முயற்சி. நமது கட்டுப்பாட்டிலிருந்து ஓரிரு முறை நாம் நழுவிப்போய்விட நேரலாம். அப்போதெல்லாம் நாம் நம்மை மிகவும் கடிந்து கொள்ளாமல், சாந்தமாக இழுத்து வந்து மீண்டும் கட்டுப்பாடில் நுழைப்பதுதான் முக்கியம்.

கஸ்தூரிபா காந்தியை அறுபதுக்கு மேல் சந்தித்த அமெரிக்கப் பத்திரிகையாளர், அவர்களது பிரம்மசரியத்தைப் பற்றிக் கேட்கிறார்: "எடுத்துக் கொண்ட விரதத்திலிருந்து இரண்டு முறை தவறிவிட்டார், காந்தி! ஆனால் இம்முறை இதுவரை அதைக் கடைப்பிடித்து வருகிறார்!" என்று பதில் கூறுகிறார் கஸ்தூரிபா.

காந்தி, ரமண மகரிஷி, மொரார்ஜி தேசாய் போன்றவர்கள் கட்டுப்பாட்டிற்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறார்கள்.

கட்டுப்பாடுடன் செயல்படும் ராணுவ வீரனை நினைவிற்குக் கொண்டு வாருங்கள். விண்வெளிக்குச் சென்ற அபோலோ குழு எத்தகைய பயிற்சிகளையும் கட்டுப்பாடுகளை



யும் மேற்கொண்டது என்று எண்ணிப் பாருங்கள். கிரிக்கெட் வீரர்களான வெங்கட்டும், காவஸ்கரும், கபில்தேவும் கட்டுப்பாட்டினைக் கடைப்பிடிக்காமல் இந்த அளவுக்கு முன்னேறி இருக்க முடியுமா? ஹெலன் கெல்லர், மில்டன், என்று கண் தெரியாத மனிதர்கள் இத்தனை சாதனைகளை எப்படிச் செய்தார்கள் என்பதைச் சிந்தித்துப் பாருங்கள். சாதனைகள் எல்லாம் மனக்கட்டுப்பாட்டிலிருந்து பிறந்தவையே.

சுயகட்டுப்பாட்டை எப்படி வளர்க்கலாம்? நமது வாழ்வின் ஒரு பகுதியாக எப்படி அமைத்துக் கொள்ளலாம்? சுய கட்டுப்பாட்டைப் பற்றிய 'விழிப்புணர்வு' கொண்டிருக்க வேண்டும் நாம். 'நான் சுயகட்டுப்பாடுள்ளவன்' என்று நமக்கு நாமே அடிக்கடி பேசிப் பெருமைப்பட்டுக் கொள்வது அவசியம் என்கிறார்கள் மனவியல் அறிஞர்கள். சுயகட்டுப்பாட்டால் விளையும் நன்மைகளை மனத்தில் அடிக்கடி கற்பனை செய்வது. அந்தக் கற்பனைகளின்போது எழும் இனிய உணர்வுகளை அடிக்கடி நினைவில் கொண்டு வருவது. கட்டுப்பாட்டின் விளைவாக வெற்றிகள் வரும்போது, "அதுதான் நான்! இந்த சிங்கம்!" என்று நம்மை நாமே தட்டிக் கொடுத்துக் கொள்வது. நமது லட்சியங்களையும் அதிலுள்ள நமது ஈடுபாட்டையும் நினைவில் கொள்வது. கடைசியாக, தளராத மனம். ஓரிரு முறை தவறினாலும் மீண்டும் மீண்டும் ஓர் ஒழுங்கிற்கும், கட்டுப்பாட்டிற்கும் வந்து சேருவது. அதிகம் சிந்திப்பவர்கள், உடற் பயிற்சியில் ஒழுங்காகத் தொடர்ந்து ஈடுபடுவது நல்ல மன உறுதியை வளர்க்கும்.

கட்டுப்பாடு என்பது, தோட்டத்தில் பாத்தி கட்டி, வாய்க்கால் வழியாக ஒவ்வொரு பாத்திக்கும் வரிசையாகத் தண்ணீர் பாய்ச்சுவது போல. பாத்தி கட்டும் போது தண்ணீர் வீணாவதில்லை. கட்டுப்பாட்டின் மூலம் நம் சக்தியை அதிக அளவுக்கு உபயோகிக்கிறோம்.

கட்டுப்பாட்டுடன் வளர்க்கப்படும் குழந்தைகள் பற்றிச் சில ஆண்டுகளுக்கு முன் ஓர் ஆராய்ச்சி செய்தார்கள். குழந்தையை இரண்டு விதமாக வளர்க்கலாம். கண்டிப்புடன், தவறுகளைச் சுட்டிக்காட்டித் திருத்துவதுடன் சிறு சிறு தண்டனைகள் அளிப்பது — இது ஒரு வழி. "சின்னப் பையன்! போனால் போகிறான்! எல்லாம் போகப் போகத் தெரிந்து கொள்வான். அவனைச் சும்மா விடு!" என்று கூறி வளர்க்கும் முறை — இது இரண்டாவது.

கண்டிப்புடன் வளர்க்கப்பட்ட குழந்தைகள் வளர்ந்தபின், வாழ்க்கையை எளிதாகச் சமாளித்தார்கள். அதிகம் மரியாதை கொண்டவர்களாக, நன்றி உள்ளவர்களாக, சொன்ன வார்த்தையைக் காப்பாற்றுபவர்களாக படிப்பிலும், வேலையிலும் அதிகக் கவனம் உடையவர்களாக, உத்தரவுகளை ஏற்றுக் கொள்பவர்களாக இருந்தார்கள். நல்ல மனோபாவம் கொண்டிருந்தார்கள் இவர்கள்.

இதன் மறுபக்கமும் இருக்கத்தான் இருந்தது. இவர்கள், அதிகம் வெட்கப்படுகிறவர்களாகவும், உணர்ச்சிவசப்படக் கூடியவர்களாகவும், தன்னைப் பற்றிய நினைப்பும், பிறர் என்ன சொல்வார்களோ என்று கவலைப்படுபவர்களாகவும் இருந்தார்கள். இவர்களிடம் சற்று அளவுக்கு மீறிய பணிவு இருந்தது. ஒதுங்கி நின்றார்கள். தங்கள் எண்ணங்களை வெளிப்படுத்துவதில் இவர்களிடம் தயக்கம் இருந்தது. சொல்ல நினைப்பதைச் சொல்ல முடியாமல் திணறினார்கள்.

பெற்றோர்கள் அடங்கிப் போய்க் குழந்தைகளுக்குச் சுதந்திரம் கொடுத்து வளர்க்கும் போது அத்தகைய குழந்தைகள் தனித்துத் தம் காலிலேயே நிற்கும் தைரியம் பெற்றிருந்தார்கள். தன்னம்பிக்கை அசாத்தியமாய் இருந்தது. சில சமயம் ஆணவம் என்கிற அளவுக்குக் கூட இருந்தது. பொதுவாக இவர்கள் கீழ்ப்படிய மறுத்தார்கள். பொறுப்பற்றவர்களாய் இருந்தார்கள். பிடிவாதம் அதிகமாகி பிறரால் எளிதில் சமாளிக்க முடியாதவர்களாக விளங்கினார்கள்.

இவற்றின் மறுபக்கம் என்ன? இவர்களுக்கு எதிலும் தொடர்ந்த ஆர்வமிருப்பதில்லை. திறமையும் கம்மி. எடுத்த காரியத்தை முடித்தோம் என்பது இவர்கள் அகராதியிலேயே இல்லை! அதிகாலையில் எழுந்தோம் என்பது போன்ற ஒழுக்கங்கள் ரொம்பக் குறைவு. தாமதமாக வருவார்கள். சோம்பேறிகளாக இருப்பார்கள். அதிகாரத்தை எதிர்ப்பார்கள்.

கண்டிப்பும் வேண்டும், குழந்தைகளுக்குச் சுதந்திரமும் நாம் அளிக்க வேண்டும். ஆனால், இந்தியாவில் — குறிப்பாகத் தமிழ்நாட்டில் எப்படி நாம் குழந்தைகளை வளர்க்கிறோம்? ஒன்று ஒரேயடியாகக் கண்டித்து அடக்கி வளர்க்கிறோம். அல்லது கண்டுகொள்ளாமலேயே விட்டுவிடுகிறோம். இது பற்றிப் பெரிய புத்தகமே எழுதலாம். யாராவது எழுத வேண்டும். ஒரு நல்ல முறைக் குழந்தைகள் சரியாக வளர்க்கப்படாததால்தான் ஒரு தான்தோன்றித்தனமான அரசியல் நிலை இன்று உருவாகி இருக்கிறதோ என்று நான் எண்ணுவதுண்டு. வீட்டில் கொடுக்கும் செல்லம், பள்ளியில் இருக்கும் கெடுபிடி இவை இரண்டும் முரண்படும்போது ஒரு வகையான தான்தோன்றித்தனத்திற்கும் அதன் எதிர்மறையான அடிமைப் புத்திக்கும் காரணமாக இருக்கிறதோ என்று நான் யோசிப்பதுண்டு.

குழந்தை வளர்ப்பு — இது கறுப்பு, இது வெள்ளை — என்று கூறுகிற மாதிரி எளிதான விளக்கத்திற்கு உட்பட்டதல்ல. ஒன்று மட்டும் உண்மை. ஜப்பானைப் பார்க்கும் போது, நம் நாடு இன்றிருக்கும் அலங்கோல நிலைக்கு நாம் குழந்தைகளை வளர்த்த முறையும் ஒரு காரணம்தான்.

— டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி

*** ஒரு மாணவன் மோசமானவனாக மாறினால் அது அவனை மட்டும் பாதிக்கிறது. ஓர் ஆசிரியர் தம் கடமையைச் சரியாகச் செய்யாது போனால் ஆயிரக்கணக்கான மாணவர்கள் பாதிக்கப்படுகிறார்கள்.



# நடக்கத்துக்கு ஓர் ஆண்டவன்!

உண்ணாவிரதமும் பாத யாத்திரையும் இன்றைய அரசியல்வாதிகள் கையில் சிக்கி ஒரு 'ஃபேஷன்' ஆகிவிட்டது. ஆறு மணி நேரம் சாப்பிடாவிட்டால் உண்ணாவிரதம்; பதினைந்து கிலோ மீட்டர் நடந்தால் பாத யாத்திரை என்று அவற்றைச் சிறுமைப்படுத்தி விட்டார்கள்.

இந்தச் சூழலிலும் இவற்றின் புனிதம் கெடாமல் பாதுகாக்கிற சில மதத் தலைவர்களுள் ஒருவர் ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் சுவாமிகள். ஆசார்ய பீடம் ஏறியது முதல், இதுவரை, நாற்பதாயிரம் கிலோ மீட்டர்களுக்கும் அதிகமாக நடந்தே தேசத்தை வலம் வந்திருக்கிறார்! பாரதத்தில் இவர் பாதம் படாத பகுதியே இல்லை என்று கூறலாம். ஐந்து ஆண்டுகளுக்கு முன்னால் சுவாமிகளுக்கு ஏற்பட்ட இதய நோயின் காரணமாக 'நடக்கக் கூடாது' என்று டாக்டரின் தடை உத்தரவு பிறந்தது. எவ்வளவு காலம் கட்டுப்படுத்த முடியும்? சரீரத்துக்கு உத்தரவு போடலாம்; ஆனால் இதயத்தில் பக்தர்கள் பால் பிரவகிக்கும் அன்பு இருக்கிறதே, அதற்கு அணை போடவா முடியும்? கும்பகோணத்துக்கு மீண்டும் நடைப் பயணம்! நாற்பத்தாறு ஆண்டுகளாக ஓடாமல் கிடந்த சாரங்கபாணி கோயில் திருத்தேர் ஓடும் போது கவனிக்க வேண்டாமா? அப்படியே ஸ்ரீரங்கத்துக்கு நடை — கும்பாபிஷேகத்தையொட்டி.

திருவரங்கத்தில் விண்ணை முட்டி எழுந்துள்ள ராஜகோபுரத் திருப்பணியில் ஸ்ரீமத் ஆண்டவன் சுவாமிகளும் பங்கேற்றிருக்கிறார். இரண்டாவது அடுக்கு இவர் பொறுப்பில் உருவானதுதான். தவிர யாகசாலைப் பணிகள் முழுவதையும் ஏற்றிருக்கிறார்.

'துறவி நடப்பதில் என்ன அதிசயம்?' என்று கேட்பவர்கள், ஆண்டவனின் பூர்வாசிரமத்தைப் பற்றிச் சற்றுத் தெரிந்துகொள்ள வேண்டும். நாற்பது ஆண்டுகளுக்கு முன்னால் கும்பகோணம் சாரங்கபாணி சுவாமி சந்நிதித் தெருவிலிருந்து கண்ணன் சுவாமி என்ற பெயரில் சென்னைக்கு வந்தவர் இன்றைய ஆண்டவன் சுவாமிகள். பதினாறு ஆண்டுகள் தேன் மழைக் குரலில் நகைச்சுவையும் பொருட்சுவையும் இன்னிசையும் மிளிர, உபந்நியாசச் சக்கரவர்த்தியாக விளங்கினார். ஸ்ரீ பகவத் ராமானுஜருக்குத் 'திருப்பாவை ஜீயர்' என்று ஓர் அடைமொழி உண்டு. அதே திருப்பெயரைக் கண்ணன் சுவாமிக்கும் அன்பர்கள் சூட்டி மகிழ்ந்தார்கள். அப்படி ஓர் இசை — பக்தியில் தோய்ந்த கணீர்க் குரலினிமை. இந்நாட்களில் கூட சொந்தத்தில் கார் வைத்திருப்பவர்கள் அரிது. பெரும்பாலும் சாலையில் நாம் பார்ப்பவை, ஒன்று, கம்பெனி காராக இருக்கும்; அல்லது அரசாங்க வாகனமாக இருக்கும். ஆனால் கண்ணன் சுவாமி சொந்தத்தில் கார் வைத்திருந்தார். டில்லி, பம்பாய், கல்கத்தா என்று உபந்நியாச நிகழ்ச்சிகளுக்காக விமானத்தில்தான் பறப்பார்! அப்படி வாழ்ந்தவர் இன்று நடக்கிறார் என்பதுதான் ஆச்சரியம்.

சென்னை, திருமலாச்சாரி உயர்நிலைப் பள்ளியில்திருப்பாவைதொடர்உபந்நியாசம் நடத்திக் கொண்டிருக்கும்போதுதான், ஒரு மார்கழி மாதக் குளிர் நேரத்தில், ஸ்ரீரங்கத்திலிருந்து அழைப்பு வந்தது. அழைத்தவர், அன்றைய ஆசார்யர், தென்பிரை ஆண்டவன் என்கிறஸ்ரீரங்கநாதமகாதேசிகர். போய் வந்தார் கண்ணன் சுவாமி. அதன் பிறகு மேலும் ஓரிரு முறை சென்று வந்தார். சுபகிருது ஆண்டு பங்குனி 26 ஆம் நாள் ஸ்ரீவேதாந்த ராமானுஜன் என்கிறதிருநாமத்தோடு ஆசார்ய பீடத்தில் அமர்ந்தார். ஆண்டவன் சுவாமிகள் ஆனார்.

கண்ணனுக்கு நம்மிடம்தான் அதிக ஈடுபாடு என்று ஒவ்வொரு கோபிகையும் எண்ணிக் கொள்வாளாம். அது போலத்தான் ஆண்டவன் சுவாமிகளின் அன்பர்களும் அவரைப் பற்றி எண்ணுகிறார்கள். அப்படி ஒரு கருணைக் கடலாகத் திகழ்கிறார்.

பூர்வாசிரமத்தில் உபந்நியாசம் செய்ததாலோ என்னவோ சுவாமிகளுக்கு நகைச்சுவை உணர்வு மிகுதி; ஓர் அன்பர் சுவாமிகளிடம் பேசிக் கொண்டிருக்கும் போது வேறு ஒருவர் வந்து சேர்கிறார். முதலில் பேசிக் கொண்டிருந்தவர் கேட்கிறார்: "இவர் நம்ப சிஷ்யரா?"

பளிச்சென்று பதில் வந்தது. "அடியேனுடைய சிஷ்யன் என்பது தெரியும்; உன்னோட சிஷ்யனாங்கிறது தெரியாது!" சொல்லிவிட்டுச் சிரிக்க, மற்ற இருவரும் கூடச் சேர்ந்து சிரித்து விட்டார்கள். அந்தச் சிரிப்பினூடே ஆண்டவனின் அடக்கத்தை உணர்ந்தார்கள். தாங்களும் அடக்கத்தைக் கடைப்பிடிக்க வேண்டியதன் அவசியத்தைக் கற்றார்கள்.

சுவாமிகளின் அன்பு, மனிதர்களை நோக்கி மட்டும் பிரவகிக்கும் என்பதில்லை. எல்லா ஜீவராசிகளையும் அந்தக் கருணை அரவணைக்கும். பம்பாய், மாதுங்கா பக்கம் அவர் முகாமிட்டிருந்த நேரம் தினமும் ஒரு நாய் அங்கு வரும். மற்றவர்கள் அருவருப்படைந்தார்கள்; ஆனால் ஆண்டவனோ, சுற்றிச் சுற்றி வந்த நாயிடமும் அருள் சுரந்தார்.

சுவாமிகளின் பயணம் தென்நோக்கித் தொடர்ந்தது. நாயும் உடன் வந்தது. கல்யாண் வரை வந்தது. பிறகு திரும்பி விட்டது. சுவாமிகள் பாதுகைப் பெட்டிகளை இறக்கச் சொன்னார். பூஜை அபிஷேகங்களை முடித்தார். பின்னர் சுற்றியிருந்தவர் வியப்பில் ஆழ்ந்து போகுமாறு அஃறிணை ஜீவனை அந்த நாய்க்குப் பரசமர்ப்பணம் விண்ணப்பித்தார். பயணம் தொடர்ந்தது. ஓரிரு நாட்களில் அந்த நாய் மரணமடைந்தது பற்றிய ஒரு செய்தி கிடைத்தது!

ஸ்ரீரங்கம் ஆண்டவன் சம்பிரதாயத்தில் தினமும் பாதுகா ஆராதனம் செய்தல் என்பது சிறப்பான அம்சம். ஸ்ரீராமபிரானின் பாதுகைகளை வைத்து அரசாண்ட உத்தமத் தம்பியான பரதனே இவர்களுக்கு

வழிகாட்டியவன். முன்பிருந்த ஆசார்யர்கள் அனைவரின் பாதுகைகளும் தனித் தனி ஓலைப் பெட்டிகளில் பூஜைப் பொருளாக வைத்து வழிபடப் படுகின்றன. பூஜை, அபிஷேகம் எல்லாம் இந்தப் பாதுகைகளுக்குத்தான்.

சரணாகதி சம்பிரதாயம் என்பது வைஷ்ணவர்களிடையே முக்கியமானது. இந்தப் பிறவியின் எல்லாச் சுமைகளை மட்டுமின்றி, எல்லாச் சிறப்புக்களையும் கூட இறைவன் பாதத்தில் இறக்கி வைத்து விட்டுத் 'தான்' என்ற எண்ணத்தை அழித்து விடுவது இது.

இந்த உயர்ந்த தத்துவத்தின் உன்னத வடிவமாக இன்று விளங்கும் ஸ்ரீமத் ஆண்டவன் சுவாமிகளின் சதாபிஷேகம் இந்த ஏப்ரல் முதல் வாரத்தில் நடைபெறுகிறது. இதுகுறித்து அனுமதி பெறச் சென்ற அன்பர்களிடம், ''கொண்டாட்டத்தை எவ்வளவு எளிமையாக்க முடியுமோ அவ்வளவு எளிமையாக்குங்கள்; சமுதாயத்தின் அடித்தள மக்கள் பயன் பெறும் வகையில் ஓர் அறக்கட்டளை நிறுவி, அதனை எத்தனை சிறப்பாக வளர்க்க முடியுமோ அத்தனை சிறப்பாகச் செய்யுங்கள்'' என்று கூறி அருளினார் ஆண்டவன்.

மகிழ்ச்சியில் ஆழ்ந்து போயிருப்பவர்கள் வைஷ்ணவர்கள் மட்டுமல்ல; இந்து சமயத்தவர்கள் மட்டுமல்ல; பல இஸ்லாமிய, ஜைன அன்பர்கள் கூட ஆண்டவன் சுவாமிகளின் நற்பணிகளை நன்கு உணர்ந்தவர்களாகச் சந்தோஷமடைந்து அறக்கட்டளைக்கு உதவியுள்ளார்கள்!

— சுப்ர. பாலன்

## நத்திங் சீரியஸ்'' — ஸ்ரீகாந்த்



ஸ்ரீகாந்துக்கு இடது கண்ணுக்கு மேலாகப் பஞ்சு வைத்து பிளாஸ்டர் ஒட்டப்பட்டிருக்கிறது— இரண்டு மூன்று அங்குல நீளத்துக்கு. இடது கண்ணில் வீக்கம். முக்கால் பாகம் மூடிக் கொண்டிருக்கிறது. மற்றொரு கண் நார்மல்.

அக்ரத்தின் பந்தை ஹூக் செய்ய முயன்ற போதுதான் மட்டையின் ஓரத்தில் பட்ட பந்து, எதிர்பாராத விதத்தில் மேலே திரும்பி, ஸ்ரீகாந்தின் இடது புருவப் பகுதியைப் பதம் பார்த்தது. பதினாறு தையல்கள்! விமானமேறி இரவு பதினொரு மணிக்குச் சென்னையில் வீடு வந்து சேர்ந்தார்.

''இப்படி அடிபட்டுக் கொள்வது மூன்றாவது தடவையாமே?''

''ஆமாம். முதல் இரண்டு தடவையும் இதே போலத்தான் பந்தை அடிக்க முயலும்போது பந்து திரும்பி நெற்றியில் அடி!''

''பட்ட காலிலேயே படும் என்பது சரியாகத்தான் இருக்கிறது. நீங்கள் ஏன் ஸ்கல் கேப் போட்டுக் கொள்ளக் கூடாது?''

''ஸ்கல் கேப், வைஸர் எல்லாம் அனாவசியம். திஸ் இஸ் ஆல் பார்ட் ஆஃப் தி கேம்'' என்கிறார் காயத்தைச் சுட்டிக்காட்டி.

''போட்டோ....?''

''நோ, ப்ளீஸ்! வேணாம். ரொம்ப டேமேஜிங்கா இருக்கும்!''

— எஸ். சந்திரமௌலி



''பெண்ணின் தகப்பனார் ஏன் மயங்கி விழுந்துவிட்டார்? வரதட்சணை தொகையைக் கேட்டா, இல்லை, சீர்வரிசைச் செலவைக் கேட்டா?''

''வரதட்சணை, சீர்வரிசை என்றால் கொடுத்துவிடலாமே. வரும் அத்தனை பேருக்கும் குடிக்கச் சுத்தமான நல்ல தண்ணீரும், குளிக்கத் தண்ணீரும் அல்லவா சப்ளை செய்யணும் என்கிறார்!''

— லலிதா செல்லப்பா

# தவளை கேட்ட கேள்வி!

* ஒரு கிராமமே அழியப் போகிறது என்ற கட்டுரை படித்தேன். தனியொருவனுக்கு உணவில்லை என்றால் ஜகத்தினை அழித்திடுவோம் என்றான் பாரதி. ஆனால், தனியொருவருக்குக் கொடுக்கப்பட்ட வாக்குறுதிக்காக ஒரு கிராமத்தையே அழிக்கப் பார்க்கும் அரசின் கொடுமை தாங்கொணாதது.

ராமன் தரையில் அம்பை ஊன்றி வைத்து எடுத்த போது, ஒரு தவளை அம்பு நுனியில் இருந்ததாம். அதைக் கண்டு பதைத்து ராமன் கேட்டானாம். "ராமா என்று சொல்லி இருந்தால் காப்பாற்றி இருப்பேனே" என்று. அதைக் கேட்ட தவளை, வேறு யாரிடமிருந்தாவது இடைஞ்சல் வந்தால் ராமா என்று கத்துவேன். நீயே அம்பை ஊன்றும் போது நான் யாரிடம் முறையிடுவேன்?" என்றதாம். அதுபோலக் குற்றம் குறைகளை அரசிடம் முறையிட, அரசு குறைகளைக் களைய வேண்டியது பொறுப்பாகும். அரசே குற்றம் செய்தால் மக்கள் யாரிடம் முறையிட முடியும்?

கத்திரிப்புலம், இராம. ஜோதிவேல்

* ஒரு கிராமமே அழியப் போகிறது என்ற கவர் ஸ்டோரியைப் படித்தேன். நமது அரசியல்வாதிகளை நினைத்து என் மனம் வேதனை அடைந்த அதே சமயத்தில் மகாத்மாவின் வாரிசுகள் என்ற கட்டுரையைப் படித்து மேற்கு ஜெர்மனியைச் சேர்ந்த ஃபிஷர் ஃபோம்ஸ்டின் ஆகியோர் நம் நாட்டிற்கு வந்து நமது அரசை நம்பாமல் தங்களுடைய நாட்டின் உதவியுடன் தொழு நோயாளிகளுக்கு ஆற்றும் பணியினை நினைத்து வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தேன்.

குடியாத்தம், கே. ஆர். ராஜா.

* ஒரு கிராமமே அழியப் போகிறது! வரி விதிப்பில் அரசின் முரண்பாடுகள் பற்றிய தலையங்கம், 68 குடும்பங்களை அம்போவாக்கிய அரசு! மொத்தத்தில் அரசின் மதிப்பீட்டைக் குறைக்கும் பட்டியல், கல்கியில் நீண்டு கொண்டே போவதைப் பார்த்தால், பயமாகத்தான் இருக்கிறது.

வல்லம், ஆர். மைதீன் பாட்சா.

* 'தங்கமும் தருதலையும்' சிறுகதை அனிச்சையாக 'சபாஷ்' போட வைத்தது.

'ரெட்டை வால் குருவியில்' ஏத்தனமான வசனங்கள் உள்ளன என்று எழுதி, படத்துக்குச் சற்றுக் கூடுதலான விளம்பரம் தேடித் தந்து விட்டீர்கள்!

இரைவிழாப் படத்தை மிகத் துல்லியமாகக் கதையாக்கியிருந்தார் ஜெயமன்மதன். அதிலிருந்த பெண்மைத் தன்மை மனத்தை நெகிழச் செய்தது.

புத்தாம்பூர், இரா. செல்வபாண்டியன்.

* ராஜாஜியின் 'பிரிவி விடை' மனத்தை நெகிழச் செய்து விட்டது.

சரித்திரம் படைத்த சாதனையாளரின் சரித்திரம் மீண்டும் ஆகஸ்டு மாதம் ஆண்டு மலரில் ஆரம்பிப்பது குறித்து மிக்க மகிழ்ச்சி.

சென்னை — 7, ஆ. விஜய்.

* "வீடு" சிறுகதைக்குப் பொருத்தமாய் மருது வரைந்திருந்த மாடர்ன் ஓவியம் மனத்தைக் கவர்ந்து, நெஞ்சில் நிறைந்தது.

கச்சநகரம், எம். ரவீந்திரன்

* சேலம் ரவுண்ட் — அப் செய்திகளைப் படித்த போது மனம் நொந்தாலும் Tree Club பற்றிய செய்தி மனத்தை நெகிழச் செய்தது.

புளியலம், ச. சுரேஷ்.

* ஒரு சிறந்த நிர்வாகி என்ற நிலையிலிருந்து ராஜீவ் காந்தி மெல்ல மெல்ல இறங்கி, சராசரி அரசியல்வாதியாய் மலிந்து வருவதற்குத் தலையங்கம் சுட்டிக் காட்டிய பட்ஜெட் சட்டத்தின் ஷரத்துக்களே சாட்சி!

எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

* தலையங்கம் கண்டேன். ராஜீவ் அரசின் கொடுமையான வரிச் சட்டங்களில் மாட்டிக் கொண்டால் இந்தியாவில்யார்தான் தொழிலில்கறுகறுப்புக் காட்டுவார்கள்? எந்த விதத்தில்தான் உண்மையான கணக்கைக் காட்டுவார்கள்? நாம் அரசுக்கு நேர்மையாக நடக்க வேண்டும் என்று நினைத்தாலும் அரசு நம்மை நேர்மையின்றித்தான் நடக்க வைக்கிறது என்பதை தலையங்கத்தின் மூலம் நன்கு உணர முடிந்தது.

தோப்புத்துறை, எச். எம். ஏ. அஷ்ரப்.

* கேரளத் தேர்தல் பற்றிய உங்கள் கட்டுரை, கேரளாவில் ஒரு சூறாவளிச் சுற்றுப்பயணம் செய்தது போல் நிலைமைகளைத் தெளிவாக எடுத்துக் காட்டியது.

தேனி, எம். ஆர். முத்துக்குமார்.

* 15.3.87 இதழில் 'போனஸ்' பற்றிய கேள்விக்கு "மனிதாபிமானத்தையும் பொருளாதாரத்தையும் புத்திசாலித்தனமாக இணைக்கும் போதுதான் நாடு உருப்படும். ஒன்றை மறந்து மற்றொன்றுக்கு முக்கியத்துவம் தருவது ஆபத்து" என்று 'தராசு' கருங்கச் சொல்லி விளங்க வைத்தது மிக அருமை. இதுபோன்ற அறிவு பூர்வமான கேள்வி பதில்கள்தான் சமூகத்தின் இன்றையத் தேவை.

நங்கநல்லூர், டி. என். நாகலிங்கம்.

* 26.1.86 கல்கி இதழில் வாணியம்பாடி வாசகர் ஒருவர் தர்மபுரி மாவட்டம் தீர்த்தமலை புண்ணிய ஸ்தலத்தில், மாசிமக விழாவில் தேர்ச் சக்கரத்தின் அடியில் ஆடு பலி கொடுக்கப்படுகிறது என்று எழுதியிருந்தார்.

கடந்த 19.3.87 அன்று மாலை நடைபெற்ற இவ்விழாவில் ஆடு ஒன்று தேர்ச் சக்கரத்தின் அடியில் பலியிடப்பட இருந்தது. ஆனால் மாவட்டக் கலெக்டர் உள்படப் பல அதிகாரிகள் வந்திருந்து அதைத் தடுத்து விட்டனர். உயிர்க் கொலை தடுக்கப்பட்டது கண்டு பெருமகிழ்ச்சி அடைந்தேன்.

பே. தாதம்பட்டி, பி. கோவிந்தசாமி.

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.

நிர்வாகக் காரியாலயம்: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை—600 032. போன்: 431543 434157.

ஆசிரியர் குழு அலுவலகம்: 28, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம், நுங்கம்பாக்கம், சென்னை—600 034. போன்: 473389.

ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ 78/—; வெளி நாடு கப்பல் தபால் ரூ 250/—; விமானத் தபால் ரூ 650/—. (ஆறு மாதச் சந்தா ஏற்கப்படும்.)

# கைபடாத சேவரிட் சேமியா மணக்குமே உங்கள் கைபட்டதும்!



Savorit

Savorit

Savorit
SEMIA

சேவரிட் சேமியா மிக நவீனமான அயல் நாட்டு இயந்திரங்களால் மிகச் சுகாதாரமான முறையில் கைபடாமல் தயாரிக்கப்படுகிறது.

உயர்தர சம்பா கோதுமை ரவையில் தயாரிக்கப்படும் சேவரிட் சேமியா சத்து நிறைந்தது. குழைந்து போகாதது. சீக்கிரமாகச் சமைக்கக் கூடியது. மேலும், சேவரிட் சேமியாவை வறுக்க வேண்டிய அவசியமில்லை. இது சமைத்த பின்பும் பால்போல் வெண்மையாக இருக்கும்!

சிற்றுண்டிகளானாலும், பாயசம் போன்ற விசேஷ உணவு வகைகளானாலும் சேவரிட் சேமியா உங்கள் சமையலுக்கு ஊட்டமும் சுவையும் கூட்டுகிறது!

ஆகையினால்தான் குடும்பநலன் கருதும் குடும்பத் தலைவிகள் விரும்பி வாங்குவது சேவரிட் சேமியாவே!

Sista's - UIM.482.85.TMA

**முத்தான அம்மா சமைப்பது சத்தான சேவரிட் சேமியா!**

**Savorit சேமியா**

மீண்டும் பார்க்கத் தூண்டும் ஜொலிப்பு...
மின்னலடிக்குது ஸுப்பர் ரின் வெளுப்பு.

